# தலைவலியா?

## போக்க ஒரே ஒரு ஸாரிடான் போதும்

'ரோஷ்'



## அது உங்களை புத்துணர்ச்சியுடன் திகழச் செய்யும்!

அதுவே **ஸாரிடானின்** தனிச் சிறப்பு

வலிக்கு நீங்கள் சாப்பிட வேண்டியது ஸாரிடான் தான். வலியை விரைவில் போக்க ஸாரிடானுக்கு ஈடான இதர வழிகள் இருக்கலாம். ஆனால் வலியுடன் ஏற்படும் சோர்வையும் போக்கி தெம்பும் உற்சாகமும் ஊட்டுவதற்காக பிரத்தியேக முறைப்படி தயார் செய்யப்படுவது ஸாரிடான் ஒன்று மட்டுமே. ஆகவேதான் ஒரே ஒரு ஸாரிடான் சாப்பிட்டதும் வலி நீங்கி உங்கள் மூளை சுறுசுறுப்பாக வேலை செய்ய ஆரம்பிக்கிறது. வேலையில் உற்சாகம் ஏற்படுகிறது. சிடு மூஞ்சி போய் சிரித்த முகத்துடன் திகழ முடிகிறது. ஸாரிடான் அளிக்கும் நிவாரணம் நிலையானது. எப்பொழுதும் ஸாரிடான் உங்கள் கைவசம் தயாராய் வைத்திருங்கள்!

**ஸாரிடான்** சாப்பிடுங்கள்

'ரோஷ்'



பல்வலி, உடல்வலி, அசௌகரியமான நாட்களில் வலி, இவற்றிற்கும் ஸாரிடான் கைமேல் பலன் தருகிறது. குழந்தைகளுக்கு ½ லிருந்து ½ வில்லை வரை மட்டுமே போதும்.

'ரோஷ்' தயாரிப்பு    ஸோல் டிஸ்ட்ரிப்யூட்டர்கள்: வால்டாஸ் லிமிடெட்

VT-7067 R



பிரபல சமையல் கலைஞர் திருமதி பிரமீளா லால் தமது விசேஷப் பக்குவ முறை ஒன்றை உங்களுக்கு உதவுகிறார்.




# பேகிங் பவுடர்

## உபயோகித்து நீங்கள் வாழைப்பழ ரொட்டி செய்து பார்த்திருக்கிறீர்களா?

### வீட்டிலே செய்த ரொட்டிக்கு பழத்தின் இன்சுவை!



கேக்குகள், பிஸ்கோத்துகள், பக்கோடா, பூரி, குலாப் ஜாமுன் முதலியவற்றை அதி மென்மையாகத் தயாரிக்கஉதவுகிறதுரெக்ஸ் பேகிங் பவுடர். சிறிதளவு உபயோகித்தாலே போதும். ரெக்ஸ் பேகிங் பவுடர் அருமையான பொருள்களிலிருந்து மிகுந்த கவனத்துடன் பக்குவப் படுத்தப் பட்டது. பேகிங் பவுடர் களில் மிகவும் சிறந்தது ரெக்ஸ்.




பக்குவ முறை:

- 500 கி. சர்க்கரை
- 250 கி. வெண்ணெ
- 6 பழுத்த வாழைப் பழம் பிசைந்தது
- 4 நன்கு கடைந்த முட்டைகள்
- 250 கி. கேக் மாவு
- 1 தேக்கரண்டி உப்பு
- 3 தேக்கரண்டி ரெக்ஸ் பேகிங் பவுடர்

1. சர்க்கரையையும் வெண்ணெயையும் ஒன்றாகப் பிசைந்து கொள்ளவும்.
2. வாழைப் பழங்களையும் முட்டைகளையும் சேர்த்துக் கலக்கவும்.
3. மாவு, உப்பு, ரெக்ஸ் பேகிங் பவுடர் மூன்றையும் ஒன்றாக மும்முறை சலித்துக்கொள்ளவும்.
4. வாழைப் பழக் கலவையை சலித்த மாவுடன் மெதுவாகக் கலக்கவும். அதிகமாகக் கலக்க வேண்டாம்.
5. கலவையை இரண்டுபவுண்டு ரொட்டி டின்களில் ஊற்றி 350 பா. சூட்டிலே 40-45 நிமிஷங்களுக்குச் சுடவும்.

தயவு செய்து எனக்கு ஒரு பக்குவ முறை செட்டை ஆங்கிலம் இந்தி / வங்காளம் / தமிழ்/ தெலுங்கு/மலையாளம்/குஜராத்தி மராத்தி/கன்னடத்தில் இலவசமாக அனுப்பி வைக்கவும்.

பெயர்..............................

முகவரி..............................

இக் கூப்பனைப் பூர்த்தி செய்து அனுப்புக:
கார்ன் ப்ராடக்ட்ஸ் கம்பெனி (இந்தியா)பிரைவேட் லிமிடெட் ஸ்ரீ நிவாஸ் ஹவுஸ், வாட்பி ரோடு, பம்பாய்-1. (பி.ஆர்)

இது போல் இன்னும் பலவகையான தின்பண்டங்களைத் தயார் செய்து உங்கள் குடும்பத்தினரை மகிழ்விக்கலாம். பின் வரும் இதழ்களைக் கவனித்துப் பாருங்கள்.

உங்கள் சமையல் உன்னதமாக இருக்க உயர்ந்த சாமான்களையே உபயோகியுங்கள்!

கார்ன் பிராடக்ட்ஸ் கோ.(இந்தியா)பிரைவேட் லிட்.
ஸ்ரீ நிவாஸ் ஹவுஸ், வாட்பி ரோடு, பம்பாய்-1. (பி.ஆர்)



ஏகபோக விற்பனை ஏஜண்டுகள்:
பாரி & கம்பெனி, டேர் ஹவுஸ், மதராஸ்-1
மற்றும் அவர்களது கிளைகள்

Bensons/1392



# கல்கி

## பொருளடக்கம்

பிலவ, மார்கழி, 15 டிசம்பர், 29



"கல்கி"யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப் பெயர்களே; சம்பவங்களும் கற்பனையே.


வண்டியில் என்ன சாமான்?
ஒன்றுமில்லை, 300 கோடி அமெரிக்கப் புதுக்கடன் பத்திரங்கள்
பெர்மிட் லைசென்ஸ் ஆட்சி



தமிழ்த்திருநாடு தன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா —பாரதியார்

மலர் 28 □ இதழ் 22



# காச்மீரப் பிரச்னைக்கு ஒரு தீர்வு

நம் நாட்டுக்கு முக்கியமான ஒரு விஷயத்தில் கவனத்தைச் செலுத்த வேண்டும். அதாவது இந்தியாவும் பாகிஸ்தானும் பரஸ்பர முரண்பாடும், அச்சமும் இன்றி வாழவே முடியாதா என்பதை அவசியம் யோசித்துப் பார்க்க வேண்டும். இந்தியாவும் பாகிஸ்தானும் சமாதான சகவாழ்வு பெற்றால்தான் நம்முடைய சக்தியும் நிதியும் ராணுவத்துக்காக ஏராளமாக விரயமாவதைத் தடுக்க முடியும். அந்நிய நாடுகளிடம் தீர்க்கவொண்ணாமல் பட்டுள்ள கடனிலிருந்து மீள இவ்விரு நாடுகளின் ஒற்றுமை அத்தியாவசியம். இந்தச் சகவாழ்வை நாம் அடையாவிடில் பாகிஸ்தான், இந்தியா ஆகிய இரு நாடுகளின் மக்களும், அரசாங்கங்களும் துளிக்கூடப் பிரயோஜனமற்றவை என்றேயாகும். இரு நாடுகளும் சமாதானத்தை விரும்புகின்றன. இரு நாடுகளும் ஜனநாயக முறையில் வாழவே விரும்புகின்றன. கொள்கை ரீதியில் நம்மிரு நாடுகளிடையே வித்தியாசம் எதுவும் இல்லை எனலாம். இரு நாட்டினரும் ஆண்டவனிடம் நம்பிக்கை உள்ளவர்கள். (பரம்பொருளுக்கு நாம் கொடுத்துள்ள பெயரில்தான் வித்தியாசம்). சமீப காலம் வரை இரு நாடுகளும் ஒரே கலாசாரச் சூழ்நிலையில்தான் வளர்ந்திருக்கின்றன. நம்மிருவருக்கும் பொதுவான புனிதச் சின்னங்கள் நம்மிரு நாடுகளிலும் உள்ளன. நமக்குப் பொதுவான இலக்கியமுண்டு. சிறிய பிரதேச மாறுபாடுகளைக் கருத்தில் கொள்ளாவிடில் நம்மிரு நாடுகளின் மொழியும் பொதுவாக உள்ளது எனலாம்.

பல்லாண்டுகளுக்கு முன் ஜனாதிபதி அயூப் கான் இரு நாடுகளுக்கும் கூட்டான ராணுவ அமைப்பை ஏற்படுத்தலாம் என யோசனை தெரிவித்தார். (பாகிஸ்தான் பிரிவினைக்கு முன் நம் தலைவர்களில் சிலரே இந்தக் கருத்தைத் தெரிவித்ததுண்டு.) ஆனால் ஸ்ரீ ஜவாஹர்லால் நேரு அவர்களோ, இந்தியாவுக்கும் பாகிஸ்தானுக்குமிடையில்தான் போர் மூளுகிற ஆபத்து இருப்பதாகக் கருதினார். எனவே இவ்விரு நாடுகளும் கூட்டுப் பாதுகாப்பு ஏற்படுத்திக்கொள்வது சாத்தியமற்றது என்று எண்ணிவிட்டார்.

இன்று நம்மிரு நாடுகளிடை மட்டுமே போர் ஏற்படுகிற ஆபத்தான வாய்ப்பு இருப்பதாகச் சொல்ல முடியாது. இருவருக்கும் பொதுவாக வெளியிலிருந்து கம்யூனிஸ ஆபத்து உள்ளது. எனவே இந்தியாவும் பாகிஸ்தானும் கூட்டுப் பாதுகாப்பைப் பற்றி நினைப்பது சாத்தியம். அதோடு நாம் செலவழிக்கவொண்ணாமலே செலவழிக்கும் கோடிக் கணக்கான ரூபாய்களை மிச்சப்படுத்தவும் கூட்டுப் பாதுகாப்பு உதவும்.

ஆனால் காச்மீரப் பிரச்னை இருக்கிறதே எனலாம். இதைத் தீர்க்காமல் சுமுக நிலை எப்படி ஏற்படும்? இரு நாடுகளும் போரிட்டுக் கொள்வதில்லை என்று உடன்பாடு காண வேண்டும் என நேரு அவர்கள் பலமுறை கூறியும், காச்மீரம் என்ற விடை காண முடியாத பிரச்னையே அதற்குத் தடையாக இருந்தது.

இந்தச் சிரமத்தைத் தீர்க்க எவ்வளவோ ஆண்டுகளாக முயன்றும், அது அப்படியே இருந்து வந்திருக்கிறது. மிகச் சிறந்த அறிவாளிகளும், மிக நல்ல நோக்கமுள்ளவர்களும் செய்த முயற்சிகளும் பலிக்கவில்லை.

இப்போது நான் ஒரு திட்டம் சொல்கிறேன். இது பைத்தியக்காரத்தனமாகக்கூடத் தோன்றலாம். ஆனால் ஒரு விசித்திர உபாயத்தினாலன்றி இந்தப் பிரச்னையைக் கடக்க வழியில்லை.

என் யோசனை; அமெரிக்கா, பிரிட்டன், ருஷியா ஆகிய இம்மூன்று நாடுகளும் காச்மீரத்தை நிர்வகிக்க ஒரு குழு (Board of Control) நிறுவி, அதன் மூலம் பத்து ஆண்டுகளுக்குக் காச்மீரத்தில் பொறுப்பு ஏற்கவேண்டும். இந்தப் பத்தாண்டுகளுக்குப் பிறகு மேற்கூறிய நிர்வாகக் குழு, காச்மீர மக்கள் தங்களது எதிர் காலம் பற்றி என்ன கருத்துக் கொண்டிருக்கின்றனர் என்றறிய ஏற்பாடு செய்ய வேண்டும். அம்மக்கள்

எந்த ஆட்சி வேண்டுமென்று முடிவு செய்கின்றனரோ, அதனை நிலைநிறுத்திவிட்டு, வல்லரசுகளின் நிர்வாகக் குழு விலகிவிட வேண்டும்.

அமெரிக்கா, பிரிட்டன், ருஷியா ஆகிய மூன்று நாடுகளையும் இவ்வாறு கூட்டுப் பொறுப்பு ஏற்குமாறு இந்தியா, பாகிஸ்தான் இரண்டும் அவற்றைக் கேட்டுக்கொள்ள வேண்டும்.

'காச்மீரம் இந்தியாவின் அங்கம். இதை மாற்ற முடியாது' என்கிறது இந்தியா. 'காச்மீரம் இன்னமும் பிரச்னையாகவே உள்ளது; அது பிரச்னையாக உள்ளவரையில் நாங்கள் இந்தியாவின் விரோதிகளே' என்கிறது பாகிஸ்தான். இது வெறும் அபிப்பிராய பேதம் என்ற அளவில் நிற்காமல், இது காரணமாகக் கோடாநுகோடி ரூபாய்கள் விரயமாகின்றன. இமயமலைபோல் கடன் சுமை ஆண்டுதோறும் உயர்ந்து வருகிறது. இந்தத் துரதிர்ஷ்ட நிலையை அடுத்த தலைமுறையினருக்கும் நாம் பிதுரார்ஜிதமாக விட்டுச் செல்லக் கூடாது. வெகு காலமாகத் தீர்க்கப்படாத பிரச்னையை நம் நாளிலேயே தீர்க்க வேண்டும். பயம், வெறுப்பு, ஆகியவற்றையும் இவற்றைவிட மோசமான தற்பெருமையையும் விட்டு, இந்தியாவையும் பாகிஸ்தானையும் சமாதான சகவாழ்வில் நிலைப்படுத்த வேண்டும்.

அமெரிக்கா வெளி விவகாரங்களிலிருந்து விலக நினைப்பதால், தென் கிழக்காசிய நாடுகள் ஒன்றன் பின் ஒன்றாகக் கம்யூனிஸ வல்லரசுகளுக்கு இரையாகிற ஆபத்து உள்ளது. இந்த ஆபத்து நிகழ்ந்து விடுவதற்கு முன் தெற்காசியாவில் ஜனநாயகத்தைக் காப்பாற்றியாக வேண்டும். இதற்கு இந்தியாவும் பாகிஸ்தானும் ஒற்றுமை கொள்வது அத்தியாவசியமாகும்.

[ராஜாஜி 'ஸ்வராஜ்யா'வில் எழுதியது.]

# பண்ணுக்குப் பெருமை; பெண்ணுக்குப் பெருமை!

இந்த டிசம்பர் 20ந் தேதி மியூஸிக் அகாடமியின் சரித்திரத்தில் ஒரு சுபதினம்; ஸ்ரீமதி எம். எஸ். சுப்புலக்ஷ்மியின் வாழ்க்கையில் ஒரு நன்னாள்; சங்கீத வரலாற்றிலேயே ஒரு முக்கியமான நாள்; ரசிகர்கள் அனைவருக்கும் ஒரு பொன் நாள்.

மியூஸிக் அகாடமியின் நாற்பத்திரண்டாவது மகாநாட்டை மாட்சிமை தங்கிய திருவிதாங்கூர் மகாராணி ஸ்ரீமதி சேது பார்வதி பாய் அவர்கள் தொடங்கி வைக்க, இம்மகாநாட்டின் தலைமைப் பொறுப்பை ஸ்ரீமதி எம். எஸ். ஏற்றுக்கொண்ட வைபவம் மகத்தான கோலாகலமாக அன்று நிறைவேறியது.

அன்று அகாடமியில் நெரிந்த கூட்டம் இன்றுவரை கண்டிராத ஒன்றாகும். முதன் முதலில் ஒரு பெண்மணி அகாடமியின் மகாநாட்டு அக்கிராஸனராகி ஸங்கீத கலாநிதியாவதில் அன்று பெண் குலம் அடைந்திருந்த பெருமிதக் களிப்புக்கு அடையாளமாக அகாடமியின் பெரிய மன்றத்தின் உள்ளும் புறமும் பெண்மணிகள் குழுமியிருந்தனர். ஸ்ரீமதி எம். எல். வஸந்தகுமாரி பிரார்த்தனை பாடி விழாவை ஆரம்பித்து வைத்தார். ராஜாஜி, ஊதாண்ட், டாக்டர் ராதாகிருஷ்ணன், வி. வி. கிரி, ஸ்ரீமதி இந்திரா காந்தி, ஹார்வுட் பிரபு, கவர்னர் உஜ்ஜல் சிங், திரு ஸி. என். அண்ணாதுரை உள்ளிட்ட ஏராளமான உள்நாட்டு, வெளிநாட்டுப் பிரமுகர்கள் அகாடமியையும் எம். எஸ்ஸையும் வாழ்த்தி அனுப்பிய செய்திகளை ஸ்ரீ டி. வி. ராஜகோபால் வாசித்த பின், அகாடமித் தலைவர் ஸ்ரீ டி. எல். வேங்கடராம அய்யரவர்கள் வரவேற்புரை நிகழ்த்தினார். திருவிதாங்கூர் மகாராணிக்கு அகாடமியின் வரவேற்பிதழை டாக்டர் வே. ராகவன் அவர்கள் வாசித்தளித்தார். அகாடமி பச்சிளம் குழந்தையாக இருந்த காலத்தில், இதே பெருமாட்டி ஓர் ஆண்டு மகாநாட்டைத் தொடங்கி வைத்தது வரவேற்பிதழில் குறிப்பிடப்பட்டிருந்தது.

மகாராணியார் தமது தொடக்க உரையில் அகாடமியின் சங்கீதப் பணியைப் பாராட்டினார். எம். எஸ்ஸின் சர்வதேசப் புகழைப் பாராட்டினார். மகாநாட்டுத் தலைமை முதன் முதலில் ஒரு பெண்ணுக்கு வழங்கப்பட்டிருப்பதைக் குறிப்பிட்டு, நியாயமாகச் சங்கீத உலகில் ஆண், பெண் என்று பிரித்துப் பேதம் பாராட்ட அவசியமே இல்லை எனவும், வித்தை ஒன்றே அளவுகோல் என்றும் கூறினார். ஸினிமாப் பாடல்கள், மெல்லிசை, ஜாஸ் சங்கீதம் இவற்றால் சாஸ்திரீய இசைக்கு ஏற்பட்டுள்ள ஆபத்தை எச்சரித்துத் தமது கன கச்சிதமான உரையை முடித்தார்.

திரு வி. கே. ராமசாமி முதலியார் வந்தனோபசாரம் கூற மகாநாட்டுத் தொடக்க விழா முடிவடைந்தது.

அதையடுத்து ஸ்ரீமதி எம். எஸ். அவர்களை அக்ராஸன பதவிக்குத் தேர்வு செய்யும் வைபவம் தொடங்கியது. ஸ்ரீமதி டி. கே. பட்டம்மாள் எம். எஸ்ஸுக்கு மலர் மாலை அணிவிக்க மகளிர்கள் புகழ் மாலை சூட்டினர். முதலில் ஸ்ரீ முடிகொண்டான் வேங்கடராம அய்யர் ஸ்ரீமதி சுப்புலக்ஷ்மியை அக்கிராஸன பதவிக்குப் பிரேரித்தார். 'எம். எஸ். தலைமை ஏற்பதால் எம். எஸ்ஸுக்குக் கௌரவமா, அகாடமிக்குக் கௌரவமா என்றே சொல்லத் தெரியவில்லை' என்றார். பிரேரணையை வழிமொழிந்த ஸ்ரீ செம்மங்குடி ஸ்ரீநிவாஸய்யர், எம். எஸ்ஸின் வித்வத் பரம்பரையையும், ஸுஸ்வரத்தையும் கொடைச் சிறப்பையும் பாராட்டிவிட்டு, 'தேச பக்தி, தெய்வ பக்தி, ஆசாரிய பக்தி, பதிபக்தி ஆகிய அனைத்தும் நிரம்பிய ஸ்திரீ ரத்தினம் இவர்' எனக் கூறினார். இவ்வளவு புகழ்

பெற்றுள்ள பின்பும் எம். எஸ்ஸிடம் காணப் படும் அடக்கமும் பணிவும், மேலும் வித்தை பயிலும் ஆர்வமும் மற்றெல்லோருக்கும் வழிகாட்டி என்றார். அவர் மியூஸிக் அகாடமியின் தலைமைப் பதவி ஏற்பது மிகப் பொருத்தம் என்றார். அடுத்து பிரேரணையை ஆமோதித்த ஸ்ரீமதி சரஸ்வதிபாய் பாலப் பருவத்திலிருந்தே தெய்வ அருளுடன் எம். எஸ். உத்தமமான சங்கீதத்தைப் பரப்பி வருவதிலும், அவர் இன்று உலகப் புகழ் பெற்றுக் கீர்த்தியின் பூர்த்தியை அடைந் திருப்பதிலும் தமது மகிழ்ச்சியைத் தெரி வித்தார். 'இன்று இந்த உலகமெல்லாம் கியாதி பெற்றுள்ள எம். எஸ். விண்வெளியில் இதர கிரகங்களை ராக்கெட்டுகள் அடையும் போது சந்திர மண்டலம் முதலியவற்றிலும் நம் சங்கீதப் பெருமையை நிலைநாட்டுவார்' என்று கூறி ஆசிர்வதித்தார். டாக்டர் நாராயண மேனன் அவர்கள் மற்ற மூவரை யும் ஆமோதித்துப் பேசுகையில், இவ்வாண்டு அகாடமியின் தலைமை ஸ்தானத்துக்கு எம். எஸ். பெண்மையின் பொலிவையும், நளின எழிலையும், பண்பையும், சீலத்தையும் அளிப் பார் என்று கூறினார்.

இதன் பின் ஸ்ரீமதி எம். எஸ். அவர்கள் தலைமை உரை நிகழ்த்தினார். இதுவரை எம். எஸ்ஸின் புகழ் பேசப்படும்போது, அதைத் தமது புகழாகவே கருதி மகிழ்ந்து வந்த சபையோர், விதுஷி உரையாற்றும்போது, அவரது இசையில் கட்டுப்படுவது போலவே பேச்சிலும் அப்படியே லயித்து அநுபவித்தது குறிப்பிடத் தக்கது.

ஸ்ரீ நாமகிரிப்பேட்டை கிருஷ்ணனின் மங் கள வாத்தியமும், வலையபட்டி ஸ்ரீ சுப்பிர மணியத்தின் அதி அற்புதமான தவில் வாத் தியமும் அகாடமியின் சங்கீத மகோற்ச வத்தை ஜாம் ஜாம் என்று தொடங்கி வைத்தன.

# ராஜாஜியின் கருத்துக்கள்

ஹரியானாவில் காங்கிரஸ் மெஜாரிட்டி குறைந்து விட்டது. எனினும் கவர்னர் நடவடிக்கை எடுக்கக் காலதாமதமாகி வரு கிறது. ஹரியானாவின் காங்கிரஸ் முதன் மந்திரி, எதிர்க் கட்சியிலிருந்து காங்கிர ஸுக்குச் சில அங்கத்தினர்களை மாறச் செய்து, தமக்கு மெஜாரிட்டி பெறக் கூடிய வாய்ப்பு உண்டாவதற்காகக் கவர்னர் காலம் கடத்துவது வருந்தத் தக்கது. கருத் தின் அடிப்படையில் சட்டசபையில் கட்சி மாறுவது ஒரு விஷயம்; பதவி பேரத்துக் காகக் கட்சி மாறுவது வேறு விஷயம்.

ஹிந்து மதத்தை விட்டவர்களைத் திரும்ப அம்மதத்தில் சேர்த்துக் கொள்ளக் கூடாது என்பது சநாதன விதி. இது சபலங்களுக்கு ஆளாகாமல் கட்டுப்படுத்தும் சாதனமாக இருந்தது. ஆனால் சமீப காலமாக, மீண்டும் மதம் மாறுவது அநுமதிக்கப் படுகிறது. பழைய விதி இருந்தபோது மக்கள் மதம் மாறும்போது நூறு முறை யோசித்தனர். சமீப வழக்கம், மக்களை எளிதில் லஞ்சத்துக் கும் இதர சபலங்களுக்கும் ஆளாகச் செய் கிறது. இதனால் சமூகங்களிடையே உரசல் ஏற்படுகிறது.

அரசியல் என்பது மதமல்ல. ஆயினும் இரண்டுக்கும் பொதுவான அம்சங்களும் கொள்கைகளும் உள்ளன.

ஃஃஃ

பாண்டிச்சேரி, காரைக்கால் நகராட்சித் தேர்தல்களில் காங்கிரஸ் கட்சி அப்படியே எடுபட்டுப் போய்விட்டது. பாண்டிச்சேரியில் காங்கிரசுக்கு ஒரே ஒரு ஸ்தானமும் காரைக் காலில் இரண்டும் கிடைத்துள்ளன. தி.மு. கவை முக்கியமாகக் கொண்டு அமைந்த நகர நல முன்னணிகள் கணிசமான முறை யில் வெற்றி பெற்றுள்ளன. மக்களின் நம் பிக்கையை காங்கிரஸ் இழந்துவிட்டது என்று இத்தேர்தல்கள் நிச்சயமாக எடுத்துக் காட்டி விட்டன. படுதோல்வி அடைந்த காங்கிர சுக்குப் பதிலாக எந்தக் கோஷ்டியையும் தேர்ந்தெடுத்துப் பரீட்சை பார்க்க வாக் காளர்கள் தயாராக உள்ளனர்.

ஃஃஃ

அமெரிக்காவின் ஆளுடக்காரர்கள் அடுத்து வரும் ஆண்டுகளில் தமது நாடு சிர மங்களைக் கடக்கும் என்று நம்புகிறார்கள். ஜான்ஸனின் தோள் மீது சுமையாகச் சார்ந் திருந்த பிரச்னைகள் நிக்ஸனின் காலத்தில் இலேசாகும் என்பது அவர்கள் கருத்து. குறிப் பாக, வியட்நாமில் அமெரிக்கா ஏற்றுள்ள பொறுப்பின் சுமை மிகவும் குறைந்துவிடும் என எண்ணுகின்றனர். ஆனால் அமெரிக்கா வின் சுமை குறையும்போதே, தெற்கு வியட் நாமின் சுமை அதிகமாகி, அதை வட வியட் நாம் விழுங்குகிற வாய்ப்பும் அதிகமாவதை நாம் மறப்பதற்கில்லை.

ஃஃஃ

ராஜ்ய சர்க்கார்களின் மீது மத்திய உள் துறை இலாகா செலுத்தக்கூடிய மேலாதிக்கம் பூரணமாக அழிந்து விடவில்லை. சூதாட்ட வெறி எப்படிப் பரவிவிட்டது என்பதைத் தமிழக அரசாங்கமே உணர்ந்திருக்கும் என நம்புகிறேன். எனவே, இத்திட்டத்தில் இனி ஈடுபட வேண்டாம் என தில்லி உத்தரவு பிறப்பித்தால் அது மறுக்காது என்றே நினைக் கிறேன். இதே போல் குஜராத்தும் தில்லியின் உத்தரவை ஏற்கும் என நம்புகிறேன். தில்லி சர்க்கார் தானே லாட்டரி நடத்து வது கௌரவக் குறைவானது எனக் கருது மாயின், இந்த அகௌரவச் செயல் கூடாது என ராஜ்யங்களுக்கு உத்தரவு பிறப்பிக்கவும் அது தயாராக இருக்க வேண்டும்.

# திரு ஏ. நேசமணி தம்பியின் வேண்டுகோள்

## காமராஜரின் தோல்வி நேசமணியின் வெற்றி

'நடைபெறப்போகும் பார்லிமெண்ட் நாகர்கோவில் தொகுதி இடைத் தேர்தலில் காங்கிரஸின் தோல்வியே என் அண்ணனின் (ஏ. நேசமணி) வெற்றி' என்று காலஞ்சென்ற திரு ஏ. நேசமணி எம். பி. அவர்களின் உடன் பிறப்புத் தம்பி திரு அப்புலோஸ் சிரோன்மணி தம் அறிக்கை ஒன்றின் மூலம் தெரிவிக்கிறார்.

திரு அப்புலோஸ் சிரோன்மணி தேவிகுளம் கண்ணன் தேவன் தேயிலைக் கம்பெனியில் பணியாற்றி இப்போது ஒய்வு பெற்றுத் தம் சொந்த ஊர் பள்ளியாடியில் திரு ஏ. நேசமணியின் குடும்ப வீட்டில் வாழ்ந்து வருகிறார்.

அடுத்த மாதம் ஜனவரியில் நடைபெறப்போகும் இடைத்தேர்தல் விஷயமாக அவர் வெளியிட்டிருக்கும் அறிக்கையில் குறிப்பிட்டிருப்பதாவது: நேசமணி அவர்கள் நம்மை விட்டு மறைந்தாலும் அவர் நினைவு நம்முடைய நெஞ்சங்களில் நிறைந்து இருக்கிறது. நேசமணியை காமராஜர் வஞ்சம் தீர்த்துக் கொண்டதையும் அவருக்கு உரிமைப்பட்ட பதவிகளைத் தர மறுத்ததையும் இந்த மாவட்ட மக்கள் மறக்க மாட்டார்கள். நேசமணிக்கு வலக்கரம் போல இருந்து அவரது போராட்டங்களுக்குத் துணை நின்று அவருடைய கட்டளைகளுக்குப் பணிந்து அவரால் 'தம்பி!' என்று அழைக்கப்பட்டவர் டாக்டர் மத்தியாஸ். டாக்டர் மத்தியாசை எங்கள் குடும்பத்தில் ஓர் அங்கத்தினராகவே கருதி வருகிறோம். அவர் என் அண்ணன் அடிச்சுவட்டில் நடப்பவர். அவருக்கு எங்கள் ஆதரவு என்றும் உண்டு. உடல் நலக் குறைவு காரணமாகக் கடந்த தேர்தலில் தான் போட்டியிடவில்லை என்று என் அண்ணன் தெரிவித்த பிறகுதான் கடந்த தேர்தலில் மத்தியாஸ் குதித்தார். அவர்கள் இருவருக்கும் மோதுதல் ஏற்படுத்த வேண்டுமென்ற நோக்கத்துடன் கடைசி நேரத்தில் காங்கிரஸார் என் அண்ணனைக் கட்டாயப்படுத்தித் தேர்தலில் நிறுத்தினர். இதனை இம்மாவட்ட மக்கள் அறிய வேண்டும். அண்ணன் நேசமணியின் இடத்தைப் பெறும் உரிமையும் தகுதியும் தம்பி மத்தியாஸுக்கே உண்டு. மத்தியாஸ் வெற்றி பெறப் பாடுபடுவோம். காமராஜரின் தோல்வியே நேசமணியின் வெற்றி!

- 'கன்னியாகுமரி' பத்திரிகையிலிருந்து

## நாகர்கோவில் தேர்தல்

நாகர்கோவில் தேர்தலில், அங்குள்ள சுதந்திரக் கட்சிக் கிளையின் தலைவர் டாக்டர் மத்தியாஸும், திரு காமராஜ் அவர்களும் போட்டியிடுகிறார்கள். காங்கிரஸுக்கு எதிரான வாக்குகளைப் பிரித்துவிட வேண்டுமென்ற நோக்கத்துடன் கம்யூனிஸ்ட் வேட்பாளராக ஒரு முஸ்லீம் நிறுத்தி வைக்கப்பட்டிருக்கிறார். காங்கிரஸின் கொள்கைகளை நிலைநாட்டுவதற்காகத் தாம் இந்தத் தேர்தலில் நிற்பதாக திரு காமராஜ் அவர்கள் சொல்லிக் கொள்ள முடியாது. இப்போது காங்கிரஸுக்கு இவ்வாறு ஆதரவு தேடுவதற்கு எந்தவித விசேஷ சந்தர்ப்பமும் ஏற்படவில்லை. தம் சொந்த முன்னேற்றத்துக்காகவே அவர் போட்டியிடுகிறார் என்பது மிகத் தெளிவு. ஒரு மனிதரின் அரசியல் முன்னேற்றத்துக்காகச் செய்கிற முயற்சியை வாக்காளர்கள் ஆதரிக்காமல் இருக்க வேண்டும். ஏகபோக்கிய வியாபாரத்துக்கு உதவும் பெர்மிட்—லைசென்ஸ் முறைக்கு முடிவு காண விரும்புபவரும் கூட்டணி சார்பில் நிற்பவருமாகிய டாக்டர் மத்தியாஸுக்கே மக்கள் ஆதரவு தருவர் என பூரணமாக நம்புகிறோம். டாக்டர் மத்தியாஸுக்கு தி. மு. க., முஸ்லிம் லீக், சுதந்திரக்கட்சி இவர்களுடைய பூரண ஆதரவு உள்ளது. கன்யாகுமரி மாவட்டத்தில் எல்லா மக்களுடைய நம்பிக்கையையும் பெற்றவர் டாக்டர் மத்தியாஸ்.






சென்னை ஸங்கீத வித்வத் சபை 42வது மகாநாட்டில் ஸ்ரீமதி எம் எஸ், சுப்புலக்ஷ்மி அவர்கள் நிகழ்த்திய தலைமை உரை

ஸங்கீத வித்யார்த்திகளின் பிரதிநிதியாக என்னைக் கருதி இந்த மகத்தான தலைமைப் பொறுப்பை ஸங்கீத வித்வத் ஸபையினர் எனக்கு அளித்திருப்பதாகவே கொள்கிறேன். ஸங்கீத வித்யாப்யாசத்தைத் தொடர்ந்து நான் மேற்கொள்ளுவதற்கு ஊக்கமளிக்கவே இந்தப் பெரும் கௌரவத்தை எனக்கு வழங்கியிருப்பதாகக் கருதுகிறேன். மேலும், பெண் குலத்தைப் பெருமைப்படுத்துவதற்காக, என்னை அதன் பிரதிநிதியாகக் கருதி இம்மகாநாட்டுக்குத் தலைமை வகிக்கும் பாக்கியத்தை எனக்குத் தந்திருப்பதாகவும் எண்ணுகிறேன். எனது சக வித்யார்த்திகளின் சார்பிலும், பெண் குலத்தின் சார்பிலும் எனது இதயபூர்வமான நன்றியை வித்வத் ஸபையினருக்குத் தெரிவித்துக் கொள்கிறேன்.

ஸங்கீத ஸாகரத்தில் மூழ்கித் திளைத்த வித்வான்கள் பலர் இருக்க, அந்த ஸாகரத்தின் கரையோரமாகச் சிறிதே நனைந்து நிற்கும் நான், ஆண்டவன் சித்தம் இது எனக் கருதி, அவனது அருளையும் பெரியோர்களின் ஆசியையும் துணைகொண்டு, இப்பொறுப்பை ஏற்கிறேன்.

இந்த விழாவை மாட்சிமை தங்கிய திருவிதாங்கூர் மஹாராணியார் அவர்கள் தொடங்கி வைப்பது எனக்குப் பெரும் பலமாக உள்ளது. மேன்மை தங்கிய மஹாராணி அவர்கள் நமது ஸங்கீதத்தில் ஆழ்ந்த பற்றுக் கொண்டவர்கள். திருவிதாங்கூர் ராஜ்யத்தில் ஏற்பட்ட இசை மறுமலர்ச்சிக்கு அவரே முக்கியமான காரணகர்த்தர். தாமே வீணாகானத்தில் தேர்ச்சி பெற்றவர். அவர்கள் முன் பாடுவதே ஒரு பாக்கியம் என்று வித்வான்கள் கருதக்கூடிய பரம ரஸிகர். மகாநாட்டின் தலைமைப் பொறுப்பை ஒரு பெண்ணிடம் கொடுத்ததோடு, மகாநாட்டைத் தொடங்கி வைக்கவும் இப்பெண்ணரசியாரைத் தேர்வு செய்தது எனக்குத் தனியானதொரு தெம்பு ஊட்டியுள்ளது.

ஸங்கீத வித்வத் ஸபை நமது இசைக்குச் செய்து வரும் ஈடுஇணையற்ற சேவையை விளக்கவே தேவை இல்லை. சாஸ்த்ரீய ஸங்கீத வளர்ச்சியில் ஈடுபட்டுள்ள ஸ்தாபனங்களில் நமது வித்வத் ஸபையே அகில பாரதத்திலும் முதன்மைக் கௌரவம் பெற்றுள்ளது. இசை நிகழ்ச்சிகள் நடத்துவதாலும், இசை ஆராய்ச்சிகள் செய்வதாலும், இசை நூல்கள் வெளியிடுவதாலும் கர்நாடக ஸங்கீதம் செழித்து வளருவதற்குப் பேருதவி புரிந்து வரும் நிறுவனம் இது.

ஐரோப்பாவிலும், அமெரிக்காவிலும், உலகத்தின் இதர நாடுகளிலும் கூடக் கர்நாடக ஸங்கீதத்தில் ஓரளவு ஈடுபாடு ஏற்பட்டுள்ளது எனில், வித்வத் ஸபைக்கு இதில் முக்கியமான பங்கு உண்டு. நமது வித்வத் ஸபை, அயல் நாட்டு இசையறிஞர்களைத் தனது மகாநாடுகளுக்கு அழைத்து ஆராய்ச்சி மூலமும், அநுபவ மூலமும் நம்முடைய கர்நாடக ஸங்கீதப் பெருமைகளை அவர்களுக்கு உணர்த்தி, அந்த அறிஞர்களின் வழியே அவர்களது நாடுகளிலும் நம் இசையின்பால் ஈடுபாடு உண்டாக்கியுள்ளது. கர்நாடக ஸங்கீத ஸாம்ராஜ்யத்தின் எல்லை ஸர்வ தேசங்களுக்கும் பரவி வரும் இந்தப் பொற்காலத்தில் ஸங்கீத வித்வத் ஸபையையும், வித்வத் ஸபைக்கு வித்தூன்றிய டாக்டர் யு. ராமராவ் அவர்களையும் ஸ்ரீ கே. வி. கிருஷ்ணஸ்வாமி அய்யர் அவர்களையும் நன்றியுடன் நினைக்க வேண்டும்.

இந்த மகத்தான மண்டப நிர்மாணம், வித்வத் ஸபையின் வாழ்வில் ஒரு முக்கியமான மைல் கல். நம் இசையின் பெருமைக்கு உகந்த பெரிய மன்றம் உருவாகிவிட்டது. எனினும், இக்கட்டிடத்துக்காக ஏராளமான பொருட் செலவை ஏற்க நேர்ந்ததால், தற்போது வித்வத் ஸபை, நிதி நிலைமையில் ஓரளவு சிரம தசையிலேயே உள்ளது. ஈசுவர அநுக்கிரகத்தில், இன்னும் ஓராண்டு காலத்துக்குள்ளேயே இந்தச் சிரமம் வெகுவாகக் குறைந்துவிடும் என்று நம்புகிறேன்.

அதன் பிறகு வித்வத் ஸபையின் ஸங்கீத சேவை இத்தனை ஆண்டுகளாக இருந்ததை விடச் சக்தியும் வேகமும் பெற முடியும்—பெற வேண்டும் — பெறும் என்றே சொல்லலாம். ஸ்தாபனத்தின் சிரமத்தைத் தீர்ப்பதற்காகத்

ஸ்ரீமதி எம். எஸ். தலைமை உரையைப் படிக்கிறார்



தற்போது செலவிடப்படும் சக்தியும் பொருளும், சிரமம் தீர்ந்த பிறகு, இன்னும் தீவிரமாக ஸங்கீத வளர்ச்சி காண்பதற்கே பயனாகும்.

ஸங்கீத வளர்ச்சியில் வித்வத் ஸபை முக்கியமாகக் கவனம் செலுத்த வேண்டிய அம்சம், இளம் வித்வான்களை முன்னணிக்குக் கொண்டு வருவதே என்று நான் கருதுகிறேன். எதிர்காலத்தில் வித்வத் உலகில் ஏற்படக்கூடிய சூனியத்தைக் குறித்து மிகவும் எச்சரிக்கையாக இருந்து, இத்தகைய உத்பாதம் நிகழாமல் முன்கூட்டியே போதிய நடவடிக்கை எடுக்க வேண்டியது அவசியம். வித்வான்களைத் தோற்றுவிக்கும் நாற்றங்காலாக இந்த வித்வத் ஸபை வருங்காலத்தில் திகழும் என்று நம்புகிறேன். அந்தப் பணிக்கே இது தன்னை முக்கியமாக அர்ப்பணித்துக் கொள்ளும் என்றும் எதிர்பார்க்கிறேன்.

**வி**த்வத் ஸபையின் மகாநாட்டுத் தலைமை வாய்த்திருக்கும் இந்த நேரத்தில் எந்த ஒரு பெண்ணுக்கும் தன் தாயின் நினைவு, நெஞ்சில் நிறைவது இயற்கை. இயல்பான, ஆத்மார்த்தமான இந்தத் தாய் — நினைவோடு என் விஷயத்தில் ஒரு காரணார்த்தமான நினைவும் சேருகிறது. என் தாய் எனக்குத் தாய் மட்டுமல்ல. என் குருவும் அவரே. எனக்கு ஸங்கீதத்தில் ஏதோ சிறிது தெரிகிறதென்றால் இந்தச் சொற்ப ஞானத்துக்கு முதல் காரணம் என் அன்னையே. எனவே, தாய் என்ற காரணமற்ற அன்பையும், குரு என்ற காரணம் பற்றிய வித்தையையும் நினைந்து, காலஞ்சென்ற எனது அருமை அன்னை வீணை விதுஷி மதுரை ஷண்முகவடிவு அம்மையாரை வணங்கி, அவரது ஆத்மசக்தியைத் துணை கோருகிறேன்.

அடுத்தபடியாக, காலஞ்சென்ற வித்வான் மதுரை ஸ்ரீநிவாஸ அய்யங்கார் அவர்களுக்கு நினைவஞ்சலி செலுத்துகிறேன். தேங்காய் உடைத்து, எனக்கு ஸங்கீத சிக்ஷை என்ற ஒன்றை முறைப்படி தொடங்கி வைத்து, வர்ணம் வரையில் கற்பித்தவர் வித்வான் ஸ்ரீநிவாஸ அய்யங்கார் அவர்களே. அதன் பின், முறையாகக் குருகுலவாஸம் என்று செய்ய இயலாமல், வீட்டிலேயே அன்னையிடம் பாடம் கேட்டேன். இந்தக் குறையை நீங்கச் செய்வதே போல், பிற்காலத்தில் அவ்வப்போது பல மகாவித்வான்களிடம் கற்றுக் கொள்ளும் பேறு எனக்குக் கிடைத்திருக்கிறது. இவர்களில் முக்கியமாக பிரம்மஸ்ரீ முசிரி அய்யர்வாள் அவர்களையும், பிரம்மஸ்ரீ செம்மங்குடி அய்யர்வாள் அவர்களையும் குருஸ்தானத்திலேயே வைத்து நமஸ்கரிக்கிறேன். இன்றளவும் இவ்விரு மகாவித்வான்கள் எனக்கு அருளுடன் போதனை அளித்து வருவதைப் பெருமையுடன் வெளியிட்டுக் கொள்கிறேன்.

பல இசைப் பெரியார்களின் ஆசிகள் ஒரு காப்புச் சக்தியாக என்னை வாழ்வித்திருக்கின்றன. இவர்களில், இசைப் பெருமாட்டி ஸ்ரீமதி வீணை தனம்மாள் அவர்களின் ஆசி எனக்குக் கிட்டியதை இன்று பூரிப்புடன் நினைவுகூர்கிறேன். நான் சிறுமியாக இருந்த போது என் தாயார் என்னை அழைத்துக் கொண்டு, எழும்பூரிலிருந்த ஸ்ரீமதி தனம்

வித்வத் சபையில் கூடியிருந்த ரசிகப் பெருமக்களில் ஒரு பகுதி.



மான் அவர்களின் இல்லத்துக்குச் சென்றிருந்தார். என்னைப் பாடச் சொல்லிக் கேட்ட அந்த நாத வித்தகி, ''நன்றாய் முன்னுக்கு வருவாள்'' என்று ஆசி கூறியது இன்றும் என் காதில் ஒலிக்கிறது.

என் நிறைந்த நன்றிக்கும், நமஸ்காரத்துக்கும் உரியவர்களில் இன்று முக்கியமாக இருப்பவர் என் கணவர் அவர்கள். நான் அவருக்கு எவ்வளவு கடமைப்பட்டிருக்கிறேன் என்பதை எத்தனை சபைகளில் மனம் விட்டு, வாய்விட்டுச் சொன்னாலும் எனக்குத் திருப்தி ஏற்படாது. தமது தனி வாழ்வு என்றும், தனிப் பெருமை என்றும் எண்ணாமல், தமக்காக இம்மியும் செய்து கொள்ளாமல், என்னை வாழ்விப்பதற்கும், எனக்குப் பெருமை ஏற்படுவதற்குமே அல்லும் பகலும் அயராது பாடுபட்டவர் அவர். நான் ஸங்கீதத்திலும் சமூகத்திலும் சிறப்பு எய்த வேண்டும் என்பதொன்றையே தமது வாழ்வின் இலட்சியமாகக் கொண்டு, என் இசையையும், வாழ்வையும் பார்த்துப் பார்த்து உருவாக்கியவர் என் கணவர். இன்று எனக்குக் கிடைத்துள்ள புகழுக்கெல்லாம் உரியவர் அவரே. எனவே, இதுவரை எனக்குக் கிடைத்துள்ள சிறப்புக்களையும், இப்போது பெருஞ் சிறப்பாகக் கிடைத்துள்ள இந்தத் தலைமைப் பதவியையும் அவரது பாதங்களிலேயே ஸமர்ப்பணம் செய்து வணங்குகிறேன். இந்தப் பொறுப்பை ஏற்க நான் அஞ்சிய போதிலும், தாய் — தந்தையாக என்னை வளர்த்து ஆளாக்கி, குருவாக எனக்குப் போதித்து, நண்பராக எனக்கு உற்சாகமூட்டி, தெய்வமாக என்னை வாழ்வித்து வரும் என் கணவரைப் பற்றி நான் உள்ளம் திறந்து பேச, இதனால் ஒரு சந்தர்ப்பம் வாய்த்ததே என்று மகிழ்கிறேன்.

இசைக் கலைஞர்கள் அனைவரும் மீளாத நன்றிக் கடன்பட்டுள்ள நாதோபாஸகர்கள் அனைவருக்கும் அஞ்சலி செலுத்துகிறேன். இந்த நாதோபாஸகர்களின் பரம்பரையைப் போல் புனிதமான, மகத்தான ஒன்று உலகில் வேறெங்குமே கிடைக்காது. சிவபெருமானும் ஸ்ரீமந் நாராயணனும், பிரம்மனுமே நாதோபாஸனை செய்தனர் என்கிறார் ஸத்குரு தியாகராஜ ஸ்வாமிகள். கமலை, கௌரி, வாகீசுவரி, குஹன், கஜமுகன் ஆகிய எல்லாத் தெய்வங்களையுமே ஸங்கீத கோவிதர்களாகப் போற்றுகிறார். நாரதர், தும்புரு, அகஸ்தியர் போன்ற முனிவர்களையும் ஆட்கொண்ட நம் ஸங்கீதத்துக்கு சாஸ்திரம் வகுத்தவரும், பரதர் என்ற மாமுனிவரே. நமது ஸங்கீதம் லௌகிகப் பொழுது போக்காக ஏற்பட்டதல்ல என்பதற்கு இந்த நாதோபாஸகப் பரம்பரையைப் பார்த்தாலே போதும். மோக்ஷ ஸாதனமாகப் பின்பற்றப்பட்ட நமது ஸங்கீதக் கலையின் உபாஸகர்கள் அனைவரையும் வணங்கும் போது, குறிப்பாக ஸங்கீத த்ரிமூர்த்திகள் நம் நினைவுக் கோயிலின் மூலஸ்தானத்திலேயே குடிகொள்கின்றனர்.

அநுபவக் கலையாகிய ஸங்கீதத்தை சாஸ்திரத்தால் மட்டும் விளக்க முடியாது. ஆயினும், எந்தெந்தக் காலத்துக்கும் இந்த மகத்தான அநுபவம் விளங்க, ஸ்தூலமான மூர்த்திகள் வேண்டும். அப்படிப்பட்ட மூர்த்திகள் நமது ஸாஹித்தியங்களே. ஸாஹித்தியங்களின் மூலம் நமது ஸங்கீதத்

ஸ்ரீமதி எம். எஸ்ஸின் தலைமை உரையை உன்னிப்பாகக் கவனித்துக் கேட்கும் மகாராணி
சேது பார்வதி பாய் அவர்களும் திருவிதாங்கூர் மகாராஜா அவர்களும்





மஹாராணிக்கு வரவேற்புப் பத்திரம் வாசித்தளித்தார் திரு வே. ராகவன்

துக்குத் தெளிவான ரூபம் தந்து, வரைமுறை செய்த வாக்கேயக்காரர்களில் சிரோமணியாக ஒளிர்பவர்கள் த்ரிமூர்த்தியரான ஸத்குரு தியாகராஜ ஸ்வாமிகளும், முத்துஸ்வாமி தீக்ஷிதர் அவர்களும், ச்யாம சாஸ்திரிகள் அவர்களுமே. ஒரே ஸ்தலத்தில் தோன்றி, ஒரே காலத்தில் வாழ்ந்து உலகமறியா அற்புதம் விளைவித்த இந்த ஸங்கீத த்ரிமூர்த்தியரை நினைவுக் கோயிலில் இருத்துவோமாக. அவர்களோடு சேர்த்து அவர்களது காலத்திலேயே வாழ்ந்த ஸ்ரீ ஸ்வாதித் திருநாள் மஹாராஜா அவர்களையும், ஸ்ரீ கோபாலகிருஷ்ண பாரதியாரையும் வணங்குகிறேன். மற்றும் கர்நாடக ஸங்கீதத்தின் பிதாமகரான ஸ்ரீ புரந்தரதாஸர், ஸ்ரீ க்ஷேத்ரக்ஞர், ஸ்ரீ அருணாசலக் கவிராயர், ஸ்ரீ முத்து தாண்டவர், ஸ்ரீ சதாசிவ ப்ரமேந்திராள், ஸ்ரீ மஹா வைத்திய நாதய்யர்வாள், ஸ்ரீ பூச்சி ஸ்ரீநிவாஸய்யங்கார்வாள், ஸ்ரீ பட்டினம் சுப்ரமண்ய அய்யர், ஸ்ரீ முத்தையா பாகவதர், ஸ்ரீ மைசூர் வாசுதேவாச்சாரியார் ஆகியோருக்கும், இன்றும் நம்மிடையே உன்னத வாக்கேயக்காரர்களாகத் திகழும் பிரம்மஸ்ரீ பாபநாசம் சிவன் அவர்களுக்கும், மேன்மை தங்கிய மைசூர் மஹாராஜா ஸ்ரீ ஜய சாமராஜேந்திர உடையார் அவர்களுக்கும் என் வந்தனங்களை அளிக்கிறேன். ராமகிருஷ்ண பரமஹம்ஸரின் மாண்பு ஸ்வாமி விவேகானந்தரால் உலகத்தில் பிரகாசமானது போல் த்ரிமூர்த்தியரின் இசைப் பெருமையைப் பிரகடனப்படுத்தும் 'ஸங்கீத ஸம்ப்ரதாய ப்ரதர்சினி'யைத் தந்த ஸ்ரீ சுப்பராம தீக்ஷிதரை முக்கியமாக நினைவு கொண்டு பணிகிறேன். 'ஸங்கீத ஸம்ப்ரதாய ப்ரதர்சினி'யைத் தமிழ் லிபியில் மத்ய ஸங்கீத நாடக அகாடமியின் உதவியுடன் நம் வித்வத் ஸபை வெளியிட்டு வருவது பாராட்டுதற்குரியது. ஸ்ரீ ஸுப்பராம தீக்ஷிதருக்கு நமது வித்வத் ஸபையில் ஒரு நினைவுச் சின்னம் வைப்பது மிகவும் அவசியம் என்று எண்ணுகிறேன்.

மேற்கூறிய மகாத்மாக்களின் பாடல்களையும், இவற்றோடு நம் இசையில் வழங்கி வரும் தேவார, திருவாசக, திவ்யப் பிரபந்தங்களையும், திருப்புகழையும், பட்டினத்தார், தாயுமானஸ்வாமிகள், ராமலிங்க ஸ்வாமிகள் ஆகியோரது பாடல்களையும், ஜயதேவ அஷ்டபதிகளையும் பார்த்தால் ஓர் உண்மை தெளிவாகப் புலனாகும். பாடல்கள் ராக ஸ்வரூபத்தை விளக்குவது மட்டுமின்றி ஈச்வர ஸ்வரூபத்தையும் விளக்கவே ஏற்பட்டவை என்பது தான் அந்த உண்மை. அவற்றைப் பக்திப் பெருக்குடனேயே இசைக்க வேண்டும். இயல்பான ஈச்வர பக்தியுடன், இசையிலும் பக்தி வைத்து ராக ஆலாபனைக்கு முக்கியத்துவம் தந்து, ராக ஸ்வரூபங்களைத் தேடித் தேடி அடைய வேண்டும் எனவும், ஸாஹித்யங்களின் பயனை பக்தி புலப்படுமாறு அவற்றை இசைத்து, நிரவலுக்குப் பிராதான்யம் தரவேண்டும் எனவும் வித்யார்த்திகளைக் கேட்டுக் கொள்கிறேன்.

பக்தி என்பது நம்முள்ளேயே இருக்கிற உண்மைப் பொருளிடம் வைக்கிற அன்பு. இந்த உட்பொருளிடம் அன்பு வைத்துவிட்டால், தானே வெளியிலுள்ள ஸகலத்திடமும் அன்பு உண்டாகிவிடும். ஏனெனில், அந்த ஸகலத்துக்கும் உட்பொருளாக இருப்பது ஒன்று தான். இந்நிலையில் பக்தன் உலகனைத்துக்கும் சேவை செய்யும் அடிமையாகிறான். இதைத் தான் 'ஸகல லோகுலகு ப்ருத்யுடை' என்றார் ஸத்குரு, தமது 'ஸுகி யெவரோ' கிருதியில், நிரந்தர ஆனந்தம் எய்துவதற்கு அவர் கூறும் வழிதான் எவ்வளவு அழகாக இருக்கிறது?

**ஸத்யமு தப்பக ஸகலலோகுலகு**
**ப்ருத்யுடை தைவ பேதமு லேக**
**நித்யமைந ஸுஸ்வரபு கானமுதோ**

ஸத்தியத்திலிருந்து பிறழாமல், உலகம் அனைத்துக்கும் தாஸனாகி, தெய்வங்களிடை உயர்வு தாழ்வு பாராட்டாமல், அழிவில்லாத ஸுஸ்வரத்துடன் இசைப்பவனே பகவந் நாமச் சுவை அறிந்த நித்தியானந்தன் என்கிறார். ஸுஸ்வரத்துடன் ஸத்தியம், சேவை, ஸம பாவம் எல்லாம் கலக்க வேண்டும் என்று இதிலிருந்து தெரிகிறது. 'உள்ளத்தில் ஒளி உண்டாகில் வாக்கினிலே ஒளி உண்டாம்' என்றார் மகாகவி பாரதியார். உள்ளம் தெள்ளத் தெளிய இருந்தால்தான் ஸுஸ்வரம் உண்டாகும். 'சுத்தமைன மனஸுசே ஸுஸ்வரமுதோ' என்பதாக அய்யர்வாள் 'சுத்தனு வாரிகி' க்ரிதியில் கூறுகிறார். சுத்தமான மனஸும் ஸுஸ்வரமும் ஒன்றிலிருந்து ஒன்று பிரிக்கவொண்ணாதவை.

ஸுஸ்வரத்துக்கு நம் வித்யார்த்திகள் மிகுந்த கவனம் செலுத்த வேண்டும் என்பது என் ஆசை. இதற்குச் சாரீரத்தை நன்கு அப்பியாஸம் செய்து பண்படுத்திக் கொள்ள வேண்டும். சாரீரத்தில் இனிமை மட்டும் இருந்தால் போதாது; நிலத்தை உழுது பண்படுத்துவதுபோல் குரலையும் பயிற்சியால் பண்படுத்த வேண்டும். பொய்க் குரலுக்குப் பாயாமல், வாய்விட்டு த்ரிஸ்தாயியிலும் பாடிப் பாடிப் பழக வேண்டும். ஸ்வர ஞானம் வெகு வெகு அவசியம். ஸ்வர ஸ்தானங்களை ஸங்கேதங்களிலோ, எழுத்துக்களிலோ வடித்துப் பயில முடியாது. அப்படிப் பயின்றால் அது சாஸ்திரமாக இருக்குமே தவிர கலையாக இராது. நம்முடைய ராகங்களில் எந்த ஸ்வரம் எப்படி வர வேண்டும் என்பதைத் துல்லியமாக வீணையை அப்பியஸித்து, நிர்ணயம் செய்ய வேண்டும். கர்ப்பகிருஹத்தில் அடங்கி

அமைதியுடன் ஒலிக்கும் வீணையும், விஸ்தாரமான பிராகாரங்களில் கம்பீரமாக ஓங்கி முழங்கும் நாகஸ்வரமும் கர்நாடக ஸங்கீதத்தின் இரு பெரும் செல்வங்கள். கமக நுணுக்கங்களுக்கும், ஸ்வர ஸ்தானத் தெளிவுக்கும் வீணை வழியை வித்யார்த்திகள் பின்பற்ற வேண்டுமெனக் கேட்டுக் கொள்கிறேன். நித்திரையைப் புறக்கணித்து, நல்ல தம்புராவைச் சுருதி கூட்டி, அயராமல் சாதகம் செய்ய வேண்டும் என்பது ஸ்ரீ தியாக ப்ரம்மத்தின் ஆணை. இப்படி எல்லாம் செய்தால், இன்று ஹிந்துஸ்தானி வித்வான்கள், (Voice Culture) குரல் பண்பாட்டுக்காகப் பெற்றுள்ள கியாதியை நாமும் நிச்சயம் பெறலாம்.

இந்த ஸாதகத்துக்கெல்லாம் மூலம், பக்தியுடன் கூடிய நல்ல மனம். நாத வித்யையைத் தொட நினைப்பவர்கள் நல்லவர்களாக இருக்க வேண்டும். நல்லவர்களாவது கடினமாக இருக்கலாம். ஆயினும் இதில் ஒரு மகத்தான அநுகூலமிருக்கிறது. இந்த முயற்சி காலம் கடந்து போவதே கிடையாது. ஒரு குறிப்பிட்ட காலத்துக்குப் பின் படித்துப் பட்டம் பெற்று டாக்டராகவோ, இஞ்ஜினீயராகவோ வக்கீலாகவோ ஆவது முடியாது. ஆனால் எத்தனை வயதுக்குப் பின்னும் ஒருவர் நல்லவராக முடியும். நல்லவர் மனத்தில் பக்தி தானாகவே ஊறும். அங்குதான் ஆண்டவனும் வந்து கோயில் கொள்ளுகிறான்.

கோயிலில் பூஜை செய்கிற அர்ச்சகர் உண்மையான பக்தியோடு பூஜை செய்தால் விசேஷம். அவர் பக்தியில்லாமல் பூஜை செய்தாலும், ஆலயத்துக்கு வருகிறவர்கள் ஆண்டவனை பக்தியுடன் வணங்கிப் போவார்கள். ஆயினும் ஸ்ரீ ராமகிருஷ்ண பரமஹம்ஸர் தக்ஷிணேச்வரத்தில் அம்பாளின் அர்ச்சகராக இருந்து அம்பாளாகவே ஆனதால் எத்தனை எத்தனை பக்தர்களை அந்த ஆலயம் கவர்ந்து, இழுத்து, அவர்களை உத்தம கதியில் செலுத்தியது? அர்ச்சகருக்குப் பக்தி இருந்தால், ஸேவார்த்திகளிடமும் அது பாய்ந்து பிரதிபலிக்கும். ரஸிகர்கள் தாமாகவே பக்தியுடன் வந்தாலும், பாடகர் பக்தியில் ஊறினால் ஸதஸு்ம் பக்தியில் மேலும் ஈடுபடும். பாடுபவர் மனம் பரமனிடம் ஒன்றினால் கேட்போர் மனமும் தானே ஒன்றும்.

இது ஸங்கீதக் கலைஞர்களின் மகத்தான பாக்கியம். உலக நடப்புக்களில் அடிபட்ட எத்தனையோ உள்ளங்களை ஈச்வரனிடத்தில் சேர்க்கும் பேறு, ஸங்கீதக் கலைஞருக்கே உரியது. இதை நமது பூஜ்ய காமகோடி பெரியவர்கள் பின்வருமாறு கூறி அருளியிருக்கிறார்கள் :

''ஸங்கீதக் கலை என்பது கொஞ்சம்கூடக் கஷ்டம் இல்லாமல் மோக்ஷத்தையே வாங்கிக் கொடுக்கக் கூடியது. வீணை வாத்தியம் ஒன்றை வைத்துக் கொண்டு, ஸ்வரசுத்தியோடு கலந்து வாசித்து ஆனந்தமயமாக இருக்கக் கற்றுக் கொண்டால், யோகம் பண்ண வேண்டாம், தபஸ் பண்ண வேண்டாம், சுலபமாக மோக்ஷத்தையே அடைந்து விடலாம்.... அதோடு யோகி யோகம் செய்தால், தபஸ்வி தபஸ் செய்தால் அவர்களுக்கு மட்டுமே ஆத்மானந்தம் உண்டாகிறது. ஸங்கீதம் ஒன்றில்தான், அதை அப்பியஸிப்பவர் மட்டுமின்றிக் கேட்கின்ற எல்லோருக்குமே, அதே அளவு ஆத்மானந்தம் உண்டாகிறது.'' இது பெரியவாள் வாக்கு.



ஸ்ரீ சதாசிவம், ஸ்ரீமதி எம். எஸ்., மகாராணி ஸ்ரீமதி சேதுபார்வதிபாய். பின்புறம் ஸ்ரீமதிகள் டி. கே. பி., எம். எல். வி., சித்தேசுவரிதேவி.

ஸங்கீதத்தில் இன்று துரதிர்ஷ்டவசமாகத் தரம் குறைந்து வருகிறது. இதற்குப் பிரதானமான காரணம் குருகுல வாஸம் எடுபட்டுப் போனதுதான் என்று அறிஞர்கள் கருதுகிறார்கள். மீண்டும் குருகுலவாஸ முறையை முன்போல் ஏற்படுத்துவது இயலாதிருக்கலாம். எனினும், அதனால் அந்தப் பழைய முறையின் மேன்மை குறையாது. கோயிலுக்குப் போகிற பழக்கத்தை மக்கள் நிறுத்திவிட்டால், அதனால் தெய்வவழிபாடு வேண்டியதில்லை என்றாகுமா?

சிக்ஷை பெறும் ஆரம்பத்திலிருந்து பல ஆண்டுகள் குருகுலவாஸம் செய்ய முடியாவிட்டாலும், கல்லூரிகளில் படித்துப் பட்டம் பெற்ற ஸங்கீத மாணவர்கள், அதன் பின்னரேனும் ஒரு குறிப்பிட்ட வித்வானின் கீழ் இரண்டு மூன்று வருஷங்களாவது பயின்று, அவரது வழி வந்துள்ள மரபின் தனிச் சிறப்புக்களைப் பெறலாம். எம். ஏ., எம். எஸ்ஸி. என்று நன்கு கற்றுத் தேர்ந்து, ஆசிரியராகிறவர்களும் பிற்பாடு ஒரு பேராசிரியரை அடுத்திருந்து, ஆராய்ச்சி செய்து, பி.ஹெச். டி. (Ph. D) முதலிய டாக்டர் பட்டங்கள் பெறுவதைப் பார்க்கிறோம் அல்லவா? இவ்வாறே நவீன முறைப்படி ஸங்கீதத்தில் ஓரளவு தேர்ச்சி பெற்றவர்களும், ஏதேனும் ஒரு காலகட்டத்தில் ஒரு மஹா வித்வானை அடுத்திருந்து அவரது வழிக்கு வாரிசாகி, ஒரு மரபு தொடர்ந்து வாழச் செய்யலாம்.

ஸங்கீதக் கலையைப் பேணி வளர்ப்பதற்காக தில்லியிலுள்ள ஸங்கீத நாடக அகாடமியும், ராஜ்யங்களிலுள்ள அதன் கிளைகளும் நற்பணி புரிந்து வருகின்றன. வித்வான்கள் உயர் படிப்புப் பெறுவதற்காகக் கணிசமான

ஸ்காலர்ஷிப்புகள் வழங்குவது ஸங்கீத நாடக அகாடெமியின் முக்கியமான பணிகளில் ஒன்றாகும். பம்பாயில் டாடா நிறுவனத்தார், இந்திய ஸங்கீத — நடன — நாடகக் கலைகளை ஸம்பிரதாயப்படி வளர்ப்பதற்காகப் பிரம் மாண்டமான அளவில் தொடங்கியுள்ள ராஷ்ட்ரீய கலைக் கேந்திரம் (National Centre for the Performing Arts) மேற்சொன்னவாறு இளம் வித்வான்கள் மகாவித்வான்களிடம் விசேஷ இசைப் பயிற்சி பெற உதவும் என்பதை அறிந்து நாம் எல்லோரும் சந்தோஷப் படுகிறோம். இசை நிபுணரும், ரஸிகப் பிரமுகருமாகிய டாக்டர் வி. கே. நாரா யண மேனன் அவர்களை நிர்வாக டைரக் டராகக் கொண்டுள்ள இந்த ராஷ்ட்ரீய கலை கேந்திரம் சம்பிரதாயக் கலைகளைத் தரம் குன்றாமல் போஷித்துத் தர இது போன்ற பல சீரிய நடவடிக்கைகளை மேற்கொள்ளும் என நம்பலாம்.

ஆரம்ப கால இசைப் பயிற்சி பற்றியும் ஒரு யோசனை தெரிவிக்க ஆசைப்படுகிறேன். ஸரளி வரிசை, ஜண்டை வரிசை ஆகியன வற்றைப் போதிக்கும் போதே, ராக ஸ்வரூபத்தை அப்படியே தம்முள் பொதிந்து கொண்டுள்ள பெரும் வாக்கேயகாரர்களின் சிறிய க்ருதிகளை வித்யார்த்திகளுக்குக் கற்பித் தல் நலம். ஸ்வரப்படுத்தாமலே இந்தக் க்ருதிகளைச் சொல்லித் தர வேண்டும். இவ் வாறு செய்வதால் ராகங்களின் ஜீவ ஸஞ் சாரங்கள் சிசைஷத் தொடக்கத்திலேயே வித்யார்த்திகளின் உள்ளங்களில் பதியும்.

சிரவணத்துக்கு நமது தேசத்தில் தனி இடம் உண்டு. இசைப் பயிற்சி செய்வோர் பாடுவதைப் போலவே, நன்கு கேட்கவும், நல்லதைத் திருப்பித் திருப்பிக் கேட்கவும் வேண்டும். செவியும் வாயும் மிக நெருங்கிய ஸம்பந்தம் உடையவை. அநேகமாக, ஊமை யாக இருப்பவர்களின் செவிப் புலனும் மந்தமாயிருப்பதிலிருந்து, இறைவன் வாக்குச் சக்தியையும் கேட்கும் சக்தியையும் எப்படிப் பிணைத்திருக்கிறான் என்பதைப் புரிந்து கொள்ளலாம். மகாவித்வான்களின் இசையை இளம் வித்வான்களும், வித்யார்த்திகளும் நிறையக் கேட்க வேண்டும்.

கச்சேரி எவ்வளவு காலம் நடக்கலாம் என்பது பற்றியும் என் அபிப்பிராயத்தைக் கூற விரும்புகிறேன். இந்நாளில் நூறாயிரம் அலுவல்களிடை கச்சேரிக்கு வருகிற மக்களை இரண்டரை மணிக்கு மேல் இசையில் கட்டுப்படுத்தி வைப்பது ஓரளவு சிரமமே. இரண்டரை மணி அவகாசம் என்பது வித்வானின் மனோதர்மத்துக்கு நிறைவு தரக் கூடியதே. உருப்படிகள் சற்றுக் குறைவாக இருக்கும் என்பதைத் தவிர, கச்சேரியின் ஸம்பிரதாய அம்சங்கள் எதையும் இந்தக் கால அளவைக்காகக் குறைத்துக் கொள்ள வேண்டிய அவசியமில்லை. இந்த வித்வத் ஸபைக் கச்சேரிகளே இரண்டரை மணி நேரம்தான் நடக்கின்றன. இவற்றில் முழுமை இல்லை என்று சொல்ல முடியுமோ ?

ஸங்கீத அப்யாஸத்தில் எவ்வளவு கடுமை யான அநுஷ்டானம் தேவை என்று உன்னிப் பார்த்தால்தான் தெரியும். இத்தனை கஷ்டப் பட்டு நாத வித்யை பயின்றவர்களின் எதிர் கால நல்வாழ்வுக்கு வழி செய்ய வேண்டியது எவ்வளவு அவசியம் ? முன்பே சொன்னது போல், இந்த வித்வத் ஸபை இளம் வித்வான் களை ஊக்குவதில் முன் நிற்க வேண்டும். மாதம் இரண்டு நாட்களாவது இளம் வித்வான்களின் கச்சேரிகளை இந்த வித்வத் ஸபை அரங்கில் வைக்கவேண்டும். இக்கச்சேரி களுக்கு ஒரு ரூபாய், அரை ரூபாய்க்கு மேல் டிக்கெட் வைக்காமல் நிறைய ரஸிகர்கள் வந்து கேட்க வாய்ப்புச் செய்து தரவேண்டும்.

எல்லா ஸபைகளிலுமே இளம் வித்வான் களுக்கு இவ்வித ஊக்கம் அளிக்க வேண்டும். ரஸிகப் பெருமக்களும் அவர்களுக்கு ஆதரவு தர வேண்டும். பேட்டைக்குப் பேட்டை சின்ன சின்ன ஸபைகள் இந்த லக்ஷ்யத்துக் காகத் தோன்றுவது அவசியம்.

இளம் வித்வான்களிடம் கவனம் செலுத்துவதோடு கூடவே முதிய வித்வான்



அண்மையில் பம்பாயில் நடைபெற்ற ஒரு விழாவில் ஸ்ரீமதி எம். எஸ். அவர்களை பாரதீய வித்யா பவனத்தின் கௌரவ அங்கத்தினராக அங்கீகரித்து தாமிர பத்திரத்தை வழங்கிக் கௌரவித்தார் பாரத ராஷ்டிரபதி டாக்டர் ஜாகிர் ஹுஸேன்.

களின் நலனிலும் சிரத்தை காட்ட வேண்டியது அவசியம். வயோதிக வித்வான்கள் வறுமையில் வாடும்படி ஸங்கீத ஸபைகளும், வசதியுள்ள மற்ற வித்வான்களும் விட்டு விடலாகாது. தாய் தந்தையரைப் பராமரிப்பது பாரத தர்மத்தின் ஆணிவேர். முதுபெரும் கலைஞர்கள் நமக்குப் பெற்றோர் ஸ்தானம் வகிப்பவர்கள் என்பதை மறவாதிருப்போம்!

வயோதிகம் என்பது எல்லாத் துறையினரையுமே பாதிப்பது எனினும், சாரீரத்தை மூலதனமாகக் கொண்ட ஸங்கீதக் கலைஞர்களை அது மிக மிகப் பாதிப்பதாகும். வக்கீல், டாக்டர் முதலிய சில துறையினருக்கு வயது ஏற ஏற, அவர்களின் அநுபவம் பெருகும் போது கூடவே வருமானமும் பெருகுவதைக் காண்கிறோம். ஆனால் ஸங்கீத வித்வான்கள் ஒரு குறிப்பிட்ட பிராயத்துக்குப் பின், பாடுவதே சிரமமாகி விடுகிறது. இதர உத்தியோகம், தொழில்களைப்போல இவர்கள் ரிடயர் ஆனதும் இவர்களுக்கு பென்ஷனுக்கு வழி உண்டா? 'க்ராச்சுவிடி' (Gratuity) உண்டா? 'ப்ராவிடண்ட் ஃபண்டு' (Provident Fund) உண்டா? ஆகவே, வக்கீல்களிடமிருந்தும் டாக்டர்களிடமிருந்தும் வசூலிப்பதைப் போலவே ஸங்கீத வித்வான்களிடமிருந்தும் இன்கம் டாக்ஸ் வசூலிப்பது நியாயமே இல்லை. இதைக் கருத்தில் கொண்டு, இசைக் கலைஞர்களுக்கு ஆரம்ப காலத்திலிருந்தே வருமான வரியில் விசேஷச் சலுகை தர வேண்டும் என்று ஸ்ரீமான் டி. டி. கிருஷ்ணமாச்சாரியார் அவர்களிடம், அவர்கள் நிதிமந்திரியாக இருந்த போதே என் கணவர் கூறியதுண்டு. அவரும் அதற்கு ஆதரவாகச் செவி கொடுத்ததாகவே தெரிந்தது. முதிய வித்வான்களுக்கு நேரடியாக அரசாங்கம் ஓரளவு உதவி செய்து வருகிறது; மத்ய அகாடெமியும் ராஜ்ய அகாடெமிகளும் ஒரு சில முதிய வித்வான்களுக்குப் பென்ஷன் அளித்து வருகின்றன. ஆனால் இந்தத் திட்டத்தை இன்னும் பெருமளவு விஸ்தரிக்க இடம் உண்டு. இந்த உதவியோடு, ஸங்கீதத்தையே ஜீவனமாகக் கொண்டுள்ள இசைக் கலைஞர்களுக்கு, வருமான வரியில் கணிசமான சலுகை தருவது பற்றியும் மத்திய சர்க்கார் யோசிக்க வேண்டும் எனக் கோருகிறேன்.

ீீீ

இன்று நாட்டில் தர்மமும் பக்தியும் இந்த அளவுக்காவது நிலைத்திருப்பதற்கு ஸ்திரீகள் தான் காரணம் என்பதை எல்லோரும் அடிக்கடி சொல்கிறார்கள். புருஷர்களும் சொல்கிறார்கள். உண்மை என்று நானும் எண்ணுகிறேன். தர்மமும், பக்தியும் மட்டுமல்ல; இன்று தமிழ் நாட்டில் நமது இசை இவ்வளவு பிரகாசமான நிலையில் இருப்பதற்குக் காரணமும் ஸ்திரீகள்தான். பக்தியும் ஸங்கீதமும் ஒன்றையொன்று சார்ந்தது. ஒன்றால் மற்றொன்று தழைக்கிறது. காரைக்கால் அம்மையாரும் ஆண்டாளும், மீராபாயும் பக்திக்காக இசைக்காகச் செய்துள்ள அற்புத சாதனையை யார் அளவிட முடியும்? அவர்களால் பாரத தர்மத்துக்கே பெருமை. அந்தப் பெருமை இன்றும் குன்றவில்லை.

கோயில்களிலும் உத்ஸவ நிகழ்ச்சிகளிலும் கலந்து கொள்ளும் மக்கள் கூட்டத்தில், பாதிக்கும் அதிகம் பெண்கள்தாம். ஏன், திருவையாற்றில் வருஷா வருஷம் நடக்கும் தியாகராஜ ஆராதனைக்கு வரும் பக்தர்



## மகாத்மாவின் மணிமொழி

என் தேசத்தை விட என் மதத்தை நான் அதிகம் நேசிக்கிறேன் என்று நான் சொன்னால் அது ஒரு விதத்தில் உண்மையே. முதலில் நான் ஒரு ஹிந்து; பிறகே தேச பக்தன். இவ்வாறு சொல்வதால் நான் தலைசிறந்த தேசியவாதிகளுக்குப் பின்தங்கி விட்டதாக ஆகாது. நான் இப்படிச் சொல்வதிலிருந்து கிடைக்கும் பொருள் யாதெனில் என் தேசத்தின் நலன்களும் என் மதத்தின் நலன்களும் ஒன்றே என்பதுதான்.

களில் பாதிக்கும் மேற்பட்டவர்கள் பெண்கள் தாம். இன்று இசைக் கல்லூரிகளில் ஸங்கீதம் பயில்பவர்களில் ஆண்களைவிடப் பெண்களே அதிகம். வருங்காலத்திலும் ஸங்கீத வித்வான் களைவிட விதுஷிகளே அதிகம் பேர் வந்தாலும் ஆச்சரியப்படுவதற்கில்லை.

பெண் குலத்துக்கு நம் இசையில் உள்ள சிறந்த கவனம் பற்றி நான் பெருமைப் பட்டாலும், இன்றைய ஆடவ இளைஞர் களுக்கு சாஸ்த்ரீய ஸங்கீதத்தில் ஈடுபாடு மிக, மிகக் குறைந்து கொண்டே வருவது கண்டு வருந்துகிறேன். ஒரு தலைமுறைக்கு முன், ஸங்கீதக் கச்சேரிகளுக்குக் கல்லூரி மாணவர்கள் எவ்வளவு பெருமளவில் வந்தனர் என்பதையும் இன்று அவர்களுக்கு சாஸ்திரீய சங்கீதத்தில் எவ்வளவு அக்கறை குறைந்துள்ளது என்பதையும் கண்டு கிலேசம் கொள்கிறேன். அடுத்த தலைமுறையில் வித்வத் உலகில் ஏற்படக்கூடிய சூனியத்தைக் குறித்துக் கவலைப்படுவது போலவே, ரஸிக உலகில் ஏற்படக்கூடிய சூனியம் குறித்தும் கவலை கொண்டு தடுப்பு நடவடிக்கை எடுக்க வேண்டும்.

ஸங்கீத தீபத்தை மங்காமல் ரக்ஷித்துத் தருகிற புனிதமான பொறுப்பைத் தாய் மார்கள் தொடர்ந்து ஏற்று, தமது மக்கட் செல்வத்துக்குப் பாலப் பருவத்திலிருந்தே ஸங்கீதத்தில் ஈடுபாட்டை ஏற்படுத்த வேண் டும் என்று கேட்டுக் கொள்கிறேன். தாய் மார்கள் அடுத்த தலைமுறையினருக்கு நல்ல ரஸிக உணர்வை ஊட்டினால் நாட்டில் ஸங் கீதம் பெருகும்; அதாவது பக்தி பெருகும்; அதாவது மக்களின் நல்வாழ்வு பெருகும்.

ஃஃஃ

இந்த உரையை முடிக்குமுன், ஸங்கீத ரஸிகர்கள் அனைவருக்கும் இதயபூர்வமாக நன்றி தெரிவிக்கிறேன். அவர்களுடைய பேராதரவுக்கும் பேரன்புக்கும் எவ்விதத்தி லும் என்னால் பிரதி செய்ய முடியாது. அவர் களிடம் எனக்குள்ள நன்றியறிதலைப் பன் முறை தெரிவித்துக் கொள்கிறேன்.

என்னை இவ்வளவு பேச வைத்த சக்தி எது என்று பக்தியுடன் எண்ணிப் பார்க் கிறேன். இங்கு பேசியது மட்டுமல்ல, இது வரை நான் உபயோகமாக ஏதேனும் செய் திருப்பேன் ஆயின், அதற்கெல்லாம் காரணம் இரண்டு மஹாபுருஷர்களின் அனுக்ரஹ சக்தியே ஆகும்.

முப்பதாண்டுகளுக்கு மேலாக ராஜாஜி என்ற ஞான விருக்ஷத்தின் நிழலில் தங்கி யிருக்கும் இணையற்ற பாக்கியம் என் கணவருடன்கூட எனக்கும் கிடைத்துள்ளது. ஒழுக்கத்தின் உருவமாகவும், பாரத பாரம் பரிய ஸம்பத்துக்கள் அனைத்துக்கும் பிரதிநிதி யாகவும் திகழும் அந்தப் புருஷோத்தமரின் ஆசிச் சக்தியே எங்களை நல்வழிப்படுத்தி அனவரதமும் எங்களுக்கு நலன்களைக் கூட்டி வைக்கிறது. அந்த மஹானுக்கு என் பணிவு நிறைந்த அஞ்சலிகளை அளிக்கிறேன்.

என்னை அல்லும் பகலும் ரக்ஷித்து, பெருவாழ்வு தந்து வரும் மற்றோர் அருள் சக்தியைப் பற்றிப் பேசவே நாத் தழுதழுக் கிறது. பிரத்யக்ஷ பரமேசுவரனாக, கண் ணுக்குமுன் காணும் காமாக்ஷியன்னையாக, நடமாடும் தெய்வமாக விளங்கும் கருணை வள்ளல் ஜகத்குரு ஸ்ரீ காஞ்சி காமகோடி சங்கராசாரிய ஸ்வாமிகள், பேதையான என் மீது வர்ஷித்து வரும் பேரருள் மழையை என்னென்பேன்? பிறவி எடுத்ததன் பயனையே அந்தப் பிரபுவின் ஸேவையில் எய்திவிட்டேன். இசையின் முடிவு இறைவன் என்பார்கள். ஆனால் முற்காலத்தில் இறை வனை இசை மூலம் காண்பதற்குமுன் மஹான் களும் மகத்தான சோதனைகளுக்கு ஆளாகி யிருக்கின்றனர். அந்த மஹான்களின் கால் தூசி பெறுமானமில்லாதவள் நான். என் னுடைய இசை வழிபாடு எவ்வளவோ குற்றம் குறைகள் மலிந்தது. இருப்பினும் எனக்கு இந்த மஹான்கள் கண்ட சோதனைகள் இன்றியே, இறைவன் ஸ்ரீ காம கோடி பெரியவாளாக எழுந்தருளி எப் பொழுதும் உடன் இருந்து கருணைபாலிப் பதை என்ன என்பேன்? அவர்களது பத்ம பாதங்களை இதயத்தில் இருத்திப் பன்முறை பணிகிறேன்.

இடத் தோளில் வீணையைச் சாய்த்துக் கொண்டு, ஆசார்ய ரூபத்தில் எழுந்தருளி, தயை பெருக்கி, வரம் நல்கும் ஸங்கீத மாதாவை வணங்குகிறேன்:

**தயமான தீர்க்கநயனும்**
**தேசிகரூபேண தர்சிதாப்யுதயாம் ।**
**வாமகுசநிஹித வீணும்**
**வரதாம் ஸங்கீதமாத்ருகாம்வந்தே ॥**

## துப்புத் துலக்க வாரீகளா?

கிட்டு சைக்கிளில் போய்க் கொண்டிருந்தான். அது அதிக ஜனநடமாட்டம் இல்லாத ஒரு வீதி. நகருக்குக் கோடியும் கூட. திடீரென்று அசுர வேகத்தில் ஒரு மோட்டார் பின்னால் வந்தது. அது ஒரு திருப்பம். கிட்டுவின் சைக்கிளில் மோதி அவனை ஆகாயத்தில் பறக்க வைத்துவிட்டுப்போயேபோய்விட்டது. கிட்டுவுக்கு உடலெல்லாம் காயம். இடதுகை எலும்பு முறிந்து விட்டதோ என்று சந்தேகம். சைக்கிள் இனி விட முடியாதபடி நசுங்கிச் சேதமடைந்து விட்டது. கிட்டுவினால் அந்தக் காரை அடையாளம் காண முடியவில்லை. ஆனால் அந்த வீதியில் இந்தச் சம்பவத்தைப் பார்த்துக் கொண்டிருந்தார்கள் இருவர். தவறு கார்க்காரருடையதுதான் என்று உறுதியாகக் கூறினார்கள் அவ்விருவரும். அவ்விருவரில் ஒருத்தி கிழவி. விபத்தை அருகேயிருந்து பார்த்தவள். காரின் நம்பரை முழுதும் அவளால் பார்த்துச் சொல்ல முடியவில்லை. ஆனால் அதன் ஆரம்ப எண் ஒன்று என்று மட்டும் உறுதியாகக் கூறினாள்.

அடுத்தவர் அந்நகரின் கணக்கு வாத்தியார். அவர் எதைப் பார்த்தாலும் உடனே அவரது கணித மூளை கூட்டிப் பெருக்கி வகுத்துத்தான் விஷயங்களைக் கிரகிக்கும். இப்போதும் அப்படித்தான். காரின் நம்பரை அப்படியே சொல்ல அவரால் இயலவில்லை. "அது ஐந்து இலக்கமுள்ள எண். முதல் இரண்டு இலக்கத்தைப் பின் மூன்று இலக்கங்களால் பெருக்கினால் வரும் விடையிலும் அதே எண்கள்தான் இருக்கும். ஆனால் மாறுபட்ட ஸ்தானங்களில். உதாரணமாக காரின் நம்பர் 24651 என்றால் 24ஐ 651ல் பெருக்கினால் வரும் விடை 15624 தானே? 24651ல் உள்ள அதே எண்கள்தான் 15624லும். இல்லையா? இதே போலத்தான் அந்தக் காரின் இலக்கங்களும் இருந்தன. ஆனால் அதில் எந்த ஸ்தானத்திலும் '0' இல்லை" என்றார் கணக்கு வாத்தியார்.





இவ்விருவருடைய வாக்கு மூலங்களைக் கொண்டு எப்படி அந்தக் காரைக் கண்டு பிடிப்பது என்று இன்ஸ்பெக்டர் குழம்பிக் கொண்டிருந்தபோது நம்ம துப்பறியும் புலி சி. ஐ. டி. சந்துரு அங்கு வந்தான். விஷயத்தைக் கேட்டதும், "இது ரொம்ப 'ஸிம்பிள்'ச்சே! வாத்தியார் கூறும் குணங்களுடைய ஐந்துஸ்தான எண்கள் வெகு சிலதான். அந்த ஒருசில எண்களிலும் முக்கியமான ஒன்றைக் கண்டுபிடிக்கக் கிழவியின் வாக்கு மூலம் உதவுகிறது. அந்த எண் ஒன்றில் ஆரம்பிக்கப்பட்டிருந்ததுதான்" என்று பத்தே நிமிஷத்தில் கணக்குப் போட்டு ஒரு நம்பரைக் குறித்துக் கொடுத்தான். அடுத்த அரை மணியில் கார் சொந்தக்காரர் கைது செய்யப்பட்டார். கிட்டுவுக்கு சைக்கிளுக்காக நஷ்டஈடு, வைத்தியச் செலவு எல்லாம் கிடைத்தன. சந்துரு கார் நம்பரை எப்படிக் கண்டுபிடித்தான் உங்களால் விளக்க முடியுமா?

### முடியுமே!

வாத்தியார் கூறியபடி முதல் இரண்டு இலக்கங்களைப் பின் மூன்று இலக்கங்களால் பெருக்கினால் அதே எண்களைக் கொண்ட விடை வரக்கூடிய ஐந்து ஸ்தான எண்கள் மொத்தம் 12தான். அவற்றில் எந்த எண்ணிலும் எங்கும் '0' கிடையாது. வெவ்வேறு மதிப்புக் கொண்டவை இந்த 12 எண்களும். ஆனால் அவற்றில் ஒன்றுக்கு மட்டுமே ஆரம்ப எண் ஒன்று. அது 14926. 14ஐ 926-ஆல் பெருக்கினால் வரும் விடை 12964. மற்ற பதினொரு எண்கள் முறையே: 24651, 42678, 51246 57834, 75231, 78624, 87435, 72936, 65281, 65983, 86251.

### தப்பு...தப்பு...தப்பு...!

☐ காகிதத்தை முதலில் கண்டுபிடித்தவர் யார் என்றால் நீங்கள் உடனே சீனாக்காரர்கள் என்றுதானே சொல்லுவீர்கள்? ஆனால் உண்மை அதுவல்ல. மனிதன் காகிதத்தைப் பற்றிக் கற்பனை செய்வதற்கு வெகு காலத்துக்கு முன்னாலேயே ஒரு சிறிய ஜந்து மரங்களிலிருந்து காகிதத்தை உற்பத்தி செய்து வந்தது. இது உங்களுக்கு வியப்பாக இருக்கிறதல்லவா? ஆனால் அது உண்மை. காகிதக் குளவி என்று ஒரு வகை. இது மரங்களைக் கூழாக்கி காகிதம் போன்றதோர் பொருளைத் தங்கள் கூடுகளைக் கட்டுவதற்குத் தயார் செய்கிறது.

☐ தாவர உலகில் மிக மிக உயரமான இனம் எது என்றால், 'அமெரிக்காவில் உள்ள ஒருவகை மரங்கள்' என்றுதானே சொல்வீர்கள்? ஆனால் அது தப்பு, தப்பு, தப்பு! உண்மையில் கடலில் வளரும் ஒருவகைப் புல்தான் உயரமான தாவர இனம். தென் அமெரிக்காவின் தென் கடல் பகுதிகளில் வளரும் கடல் தாவரம் அறுநூறு அடிகள் வரை வளருகின்றன. ●





சிறுவர் விருந்து



தயாரிப்பு: வாண்டுமாமா



## பிறந்தது எப்படி?

அவருக்கு அவன் ஒரே மகன். அருமைக் குழந்தை. ஆனால் ரொம்ப நோஞ்சானாக இருந்தான். உடலில் பலமில்லை. அவனது சகோதரி நாட்டியாக நிடகாத்திரமாக இருக்க இவன் மட்டும் இப்படி இருக்கிறானே என்ற கவலை தகப்பனாருக்கு. ஆனால் அவரேகூட ரொம்ப உறுதியானவரில்லை. தம்மைக் கொண்டு தம் பிள்ளை பிறந்து விட்டானே என்ற கவலை அவருக்கு. அதனால் தம் மகனைப் பலசாலியாக்க முனைந்தார் அந்த மிருக வைத்தியர். அவர் பெயர் ஜான் பாய்டு டன்லப். டன்லப்பின் மகனைச் சோதித்த டாக்டர், குழந்தைக்கு நல்ல காற்றும் தேகப் பயிற்சியும் அவசியம் என்று அறிவுறுத்தினார். அவன் உடலுக்கேற்றபடி இலேசான பயிற்சிகளாக இருக்க வேண்டும் என்றார். முரட்டுத்தனம் அவனுக்கு ஒத்துக் கொள்ளாது. குழந்தையை மூன்று சக்கர, அல்லது இரண்டு சக்கர வண்டிகளை ஓட்டிப் பழகும்படி யோசனை கூறினார்.

டன்லப் தம் மகன் சைக்கிள் விடுவதைப் பற்றிய கவலையில் மூழ்கினார். அந்தக் காலத்தில் இன்று போல் தார் ரோடுகள் கிடையாது. பாறைகளைப் பரப்பிய ஒரு மாதிரியான வீதிகள். சைக்கிள்களுக்கு இன்றுபோல் காற்றடித்த டயர்கள் கிடையாது. கெட்டி ரப்பராலான கட்டை டயர்கள்தான். ஆகவே அந்தகைய சைக்கிளில் அம்மாதிரியான வீதிகளில் போனால் தூக்கிப் போட்டுக் குலுக்கி எடுக்கும். அப்போது நோஞ்சானான தம் மகனின் உடல் நிலை ரொம்ப மோசமாகுமே என்று கவலைப்படலானார் டன்லப். ஆகவே அவனுக்கேற்ற சைக்கிளை உருவாக்குவதில் முனைந்தார். ரப்பர் குழாய்கள் உபயோகத்திலிருந்த காலம்தான் அது. ஆகவே கொஞ்சம் ரப்பர்க் குழாய்களை வாங்கி வந்தார். தம் தச்சுப் பட்டறையில் ஒரு வட்டமான மரப் பலகையை உருவாக்கி அதன் ஓரங்களில் முரட்டு லினன் துணியை ஆணி கொண்டு பொருத்தினார். ரப்பர் குழாயை மரச் சக்கரத்தின் லினன் பொருத்திய பகுதியின் மீது வைத்து உலோக உரையால் வெளிப்பக்கத்தில் அதை மூடி இணைத்தார். பிறகு ரப்பர் குழாயில் காற்றை அடைத்து உறுதியாக்கினார். உருவாக்கிய சக்கரத்தை உருட்டிப் பார்த்தார். கடபுடா சத்த முண்டாக்கினாலும் கல் தரையில் லாகவமாகச் சென்றது. சுவரில் மோதிய போது துள்ளித் திரும்பியது. ஏதோ ஒரு நம்பிக்கை ஏற்பட்டது டன்லப்பிற்கு. ஒரு சைக்கிளுக்கு இத்தகைய மர உருளையும், உலோக உரையும் ரொம்பக் கனம் என்று தீர்மானித்தார். வேறு விதமாகச் செயல்படலானார். எப்படியும் தம் மகன் வசதியாகச் சவாரி செய்யச் சைக்கிள் தயாரித்துவிட முடிவு கொண்டார். குழந்தைப் பையன் விடக் கூடிய மூன்று சக்கர வண்டி ஒன்றை வாங்கி வந்தார். அதன் முன் சக்கரத்தின் குறுக்களவு ஒரு அடிதான். ஆனால் இரு பின் சக்கரங்களும் ரொம்பப் பெரிது. இன்றையப் பெரியவர்களின் சைக்கிள் சக்கரங்களைப் போன்றது. டன்லப் இந்த இரு பெரிய சக்கரங்களிலும் மாற்றம் செய்ய முற்பட்டார். இரண்டு ரப்பர் டியூப்புகளை வாங்கினார். சாக்குகளைக் கொண்டு சக்கரத்தின் 'ரிம்'மோடு அந்த ரப்பர் டியூபை இணைத்துத் தைத்தார். ரப்பர் குழாய்க்கு இந்தச் சாக்குப் போர்த்தல் தக்க பாதுகாப்பில்லைதான். ஆகவே கெட்டியான ரப்பர்த் துண்டுகளை அந்தச் சாக்குச் சுற்றலின்மீது வைத்து நாடாவைக் கொண்டு அந்த ரப்பரையும் ரிம்மையும் சுற்றிக் கட்டுகளைப் போட்டார். தாம் தயாரித்த இந்த வேடிக்கையான சக்கரத்துடன் கூடிய வண்டியோடு இருட்டிய பிறகு தம் மகன் ஜானியுடன் ஜனநடமாட்டமில்லாத பெல்பாஸ்ட் நகரின் தெருவுக்குப் போனார். ஜானி சைக்கிளை விட்டான். வெற்றி. ஒரு குலுக்கல் குதிப்பு இல்லை. வெகு வேகமாக மிதித்துப் பறக்கலானான் ஜானி. தகப்பனார் 'மெதுவாக மெதுவாக' என்று கத்தி எச்சரிக்க வேண்டியிருந்தது. 'என் பள்ளித் தோழர்களையெல்லாம் வெற்றி கொண்டு விடுவேன்' என்று மகிழ்ந்து போனான் மகன். தம் வெற்றியை மனைவியிடம் மகிழ்ச்சியோடு கூறினார் டன்லப். "அதி வேகமாக ஓட்டாதே" என்று எச்சரித்தாள் அம்மா. ஆனால் மகன் தன் தகப்பனார் அமைத்துக் கொடுத்த மூன்று சக்கர சைக்கிளைக் கொண்டு பள்ளியில் நடந்த போட்டியில் வெற்றி பெற்றான்.

டன்லப் தம் தயாரிப்பை 'பேடண்ட்' செய்தார். இந்தியா ரப்பரையும் துணி அல்லது அது போன்ற தகுந்த பொருளையும் கொண்டு உருவான டயர்கள் உற்பத்தியாயின. உள்ளே காற்றடித்த ரப்பர் டியூபுகள் பொருத்தப்பட்டன. ஒரே வருஷத்தில் கட்டையான கெட்டி டயர்போட்ட சைக்கிள்கள் மறைந்தன. மிருக வைத்தியர் டன்லப்பின் மிகப் பெரிய கண்டு பிடிப்பான டயர், டியூப் இன்று உலகத்தைக் காற்றின்மீது சவாரி செய்ய வைத்திருக்கிறது.

## ஒன்றில் பல!

மானின் உடல், ஒட்டைச் சிவிங்கியின் தலை, வரிக் குதிரையின் கால்கள், எருதின் குளம்புகள் இப்படியொரு மிருகத்தை எழுதிப் பார்த்தால் எப்படி இருக்கும்? 'கண்டு பிடி' பகுதியில் உங்களுக்கு ஒரு புதிராகப் போடலாம். ஆனால் இயற்கையின் விந்தையான சிருஷ்டிகளில் இப்படியே ஒரு மிருகம் இருக்கும் என்பதை நம்பமாட்டார்கள். ஆராய்ச்சி மனப்பான்மை கொண்ட ஆங்கிலேயர்களே நம்பவில்லை. இது ஆப்பிரிக்க சுதேசிகளின் கற்பனைக்கதை என்றே எண்ணினார்கள். ஆனால் ஹாரி ஜான்ஸடன் என்ற பிரபல ஆப்பிரிக்க வனவள ஆராய்ச்சியாளர் 1900ம் ஆண்டு சில சுதேசிகள் வினோதமான தோலாடை அணிந்திருப்பதைக் கண்டார். அந்த மிருகத்தின் முழுத் தோலும் தனக்கு வேண்டும் என்று கேட்டார். அடுத்த ஆண்டு ஹாரி, வன இயல் உலகை வியப்பில் ஆழ்த்தும் அதிசயத்தைச் செய்தார். ஒகாபியின் பதனிடத்த உருவத்தை இங்கிலாந்துக்கு அனுப்பி வைத்தார். இதுவரை யாரும் காணாத புதிய மிருகத்தை உலகுக்கு அளித்தார். அது அவருக்கு 'ஒகாபியா ஜான்ஸ்டோனி' என்ற விருதையே பெற்றுத் தந்தது. உயிர் உள்ள ஒகாபியைப் பிடித்து வரப் பல முயற்சிகள் மேற்கொள்ளப்பட்டன. ஆப்பிரிக்காவின் காங்கோ கானகத்தின் மனிதர் புக முடியாத பகுதிகளில் வாழும் ஒகாபியை உயிரோடு பிடிப்பது அத்தனை சுலபமாக இல்லை. தவிர இது மிக்க கூச்சமும் பயந்த சுபாவமும் உடைய பிராணி.

1936ல்தான் முதல் ஒகாபியை உயிரோடு உலகம் கண்டது. இதுவரை ஆறு ஒகாபிகளைத்தான் பிடிக்க முடிந்திருக்கிறது என்றால் பார்த்துக் கொள்ளுங்கள்.



மகாநாட்டில் தலைமைப் பேருரை நிகழ்த்தினார். அந்தப் பேருரையில் இந்தியாவின் இறந்த காலத்தை எவ்வாறு போற்றுகிறார் பாருங்கள்: ''பல ஆயிரம் ஆண்டுகளுக்கு முன்னிருந்த முனி சிரேஷ்டர்கள் வேலை ஒன்றும் செய்யாமல் பத்மாசன நிலையில் தூங்கி வழியவில்லை. இவர்கள் சிறந்த சிந்தனையாளர். சுதந்திர மனப் போக்குடையவர். தீர்க்கமாகச் சிந்தித்துக் காலத்தால் அழியாத தத்துவங்களை அளித்தனர். அம்மரபில் வந்த இந்தியப் பெருமக்களுக்கு இயற்கையிலேயே ஆராய்ச்சித் திறன் இருப்பதில் வியப்பொன்றுமில்லை.''

அணு சக்தித் துறையில் இந்தியா அடைந்துள்ள முன்னேற்றத்துக்குப் பாபா ஆற்றிய தொண்டை விவரிக்கவும் அவரது மேதா விலாஸத்தை விளக்கவும் வார்த்தைகள் போதா. உணர்ந்து அறியப்பட வேண்டியவை. அவர் நிறுவிய நிலையங்கள் அவர் பெருமையை ஓரளவு அறிய உதவும்.

தம் பிறப்பாலும், வளர்ப்பாலும், படிப்பாலும், ஆற்றலாலும், செய்கைகளாலும் புகழின் சிகரத்தில் வாழ்வு முழுதும் சஞ்சரித்த இப்பேரறிஞர் தம் முடிவையும் ஒரு சிகரத்திலேயே வைத்துக் கொண்டதில் வியப்பொன்றுமில்லை.

அவர் பிரயாணம் செய்த விமானம் 24-1-66 காலை ஆல்ப்ஸ் மலைத் தொடரின் கொடுமுடியான வெண் பனிச் சிகரத்தில் (Mount Blanc) மோதியது. விமானத்தில் இருந்த யாருமே உயிர் பிழைக்கவில்லை. பாபாவை இழந்த விஞ்ஞான உலகம் ஏழைமைக் கோலம் கொண்டது. தாழ்வான செய்கைகளை மனத்தாலும் அறியாத அப்பெருமகனின் பூதஉடலை உச்சியிலிருந்து கீழே கொண்டு வரவே முடியவில்லை. இயற்கையின் அழகில் வாழ்வு முழுவதும் மனத்தைப் பறிகொடுத்த பாபா அவ்வழகிய மலைமுகட்டில் மீளா உறக்கத்தில் ஆழ்ந்தது பொருத்தமே அல்லவா?

---

நாடக மேடை

## ஸ்ரீமதி



'ஆவதும் பெண்ணாலே, அழிவதும் பெண்ணாலே' என்னும் பழமொழியின் அடிப்படையில் உருவான நாடகம் ஸ்ரீமதி. பெண்ணின் பெருமையைச் சித்திரிக்க முயலும் இந்த நாடகத்திலே ஸ்ரீமதிதான் முக்கிய கதாபாத்திரம். ஸ்ரீமதியாக வரும் ரேணுகாவே தமது அமெரிக்கையான நடிப்பினால் இந்நாடகத்துக்கு உயிரூட்டுகிறார்; முதலிடமும் பெறுகிறார்.

இந்த நாடகத்தைப் பின்னிச் செல்வதற்கு மூன்று சகோதரர்கள் முக்கியமானவர்கள், ரகு, ராமு, பாலு என்று! ரகுவாக வரும் திரு முத்துராமன் நடித்துப் பழகியவர்; அப்படிப் பழகிப் பெயரெடுத்தவர். ஸ்ரீமதியின் கணவனாக, தம்பிகளின் தலைவனாகத் தம் பாகத்தைத் திறம்பட வகிக்கிறார். இரண்டாம் சகோதரனாக வரும் திரு கஸ்தூரியை மூன்றும் தம்பி பாலுவாக வரும் திரு சம்பத் முந்திக் கொண்டு இரண்டாம் இடத்தைப் பற்றிக்கொண்டு விடுகிறார். பாராட்டுக்குரிய பரிமளிக்கும் நடிப்பு. படபடப்பிலும் ஒரு நிதானம் காட்டியிருந்தால் இன்னும் சிறப்பாக இருந்திருக்கும்.

உலகத்தை ஒரு நாடகம் என்றால், அதில் வரும் பாத்திரங்கள் அனைவருமா ஒருவருக்கொருவர் உறவு பின்னிக் கொண்டு உலவுகிறார்கள்? இதையே பிரதிபலிப்பது போல் இந்த நாடகத்தில் திரு மூர்த்தி, மாமாவாக இடம் பெறுகிறார். நகைச்சுவை ததும்பும் அவரது நடிப்பு இவருக்கும் நாடகத்துக்கும் என்ன சம்பந்தம் என்பதையே சிந்திக்க மறக்கும் அளவுக்கு உயர்ந்து நிற்கிறது. உதவி மானேஜராக வரும் திரு அனந்துக்கு ஆங்கிலம் உதவுகிறது, நடிப்புக்கும் மேலாக.

குறைந்த பாத்திரங்கள், நிறைந்த நடிப்பு. காட்சிக்குக் காட்சி கடவுள் வழிபாடு. இரண்டொரு பாத்திரங்களைத் தவிர மற்றவர்களுக்கெல்லாம் காட்சிகளில் சமப் பங்கீடு. கதையில் உள்ள குற்றங்குறைகளைக் கணக்கிடத் தொடங்கினால், முடிவது போல் முடிந்து உயிர் பெற்றுக் கொலையுண்ணும் இந்த நாடகக் கதையைப் போல், அட்டவணை நீண்டுவிடும். ஸ்ரீமதியிடம் களங்கம் காண விழையும் மணி என்னும் பாத்திரம் வசனங்களை ஒப்புவித்துவிட்டு ஓடும் கட்டம் இதற்கு ஒரு பதச்சோறு. சுருங்கச் சொன்னால் 'யூனிட் கிளப்'பின் ஸ்ரீமதி நாடகத்தில் நடிப்பு நிறைந்திருந்தும் நாடகக் கதையைத் தான் காணோம்.

# 007 பாலு

கதை: குமரன்
படம்: விஜயா






















பட்டின் வழவழப்பு, மெல்லியரின் மென்மை
CIBA
வஸந்தத்தின் பொலிவு ...


Binaca
Talc
Binaca
Talc
Binaca
Talc


துர்மணத்தை நீக்கி குளுமையான புத்துணர்ச்சியூட்டும்
நேர்த்தியான நறுமணம்
பினகா
பரிமள பவுடர்
துர்கந்த மகற்றி
சருமத்தை மென்மையாக்கும்
திரிவகங்கள் அடங்கியது.

# கிளிஞ்சல்



# கோபுரம்

### அத்தியாயம் பதினொன்று

## கனி விழுந்தது; கல் எங்கே?

முத்துசிவனுக்கு ரட்சகனை மூன்று நான்கு வருடங்களாகவே தெரியும். இவனுடைய கம்பெனியில் கொஞ்ச காலம் அவன் வேலை பார்த்திருக்கிறான்.

அவனது சொந்தக் குடும்ப வரலாறு பற்றி அதிகம் தெரியாதுபோனாலும் இப்போதைய வாழ்க்கை விவரங்களை இவன் ஓரளவு அறிவான்.

நல்ல வசதியான குடும்பம் ஒன்றில் பெண் எடுத்துக் கல்யாணம் பண்ணிக் கொண்ட ரட்சகன், மாமனார் வீட்டிலேயே இருந்து காலம் தள்ளி வருபவன். அவனுடைய மாமனார் ரயில்வே இலாகாவில் இஞ்சினீயராக உத்தியோகம் பார்த்து ரிடையரானவர். வீடு வாசல், பணம் காசோடு இருப்பவர்.

மாமனார் பசையுள்ளவராக இருந்தால் மாப்பிள்ளைக்கு உடம்பு வளையாமல் போவது சகஜம்தானே? கல்யாணமான மறு வருஷமே தான் பார்த்து வந்த 'ஸ்டெனோ' வேலையை உதறியெறிந்துவிட்டு அதற்கு ஒரு 'தகுந்த' காரணமும் கூறினான் ரட்சகன்.

இந்தக் காலத்துப் படித்த வாலிபர்களுக்கு இரண்டு விதமான 'பைத்தியம்' பிடிப்பது உண்டு. ஒன்று அரசியல் பைத்தியம்; இன்னொன்று நாடகப் பைத்தியம். படித்துக் கொண்டிருக்கும் போது அரசியல் பைத்தியம் பிடிக்கும்; படித்துவிட்டு வேலையில் அமர்ந்ததும் நாடகப் பைத்தியம் பிடித்து விடும். இதில் காசு சேர்க்கும் காரியப் பைத்தியங்களும் கையில் இருக்கும் காசைக் கரைத்துப் போடும் அப்பாவிப் பைத்தியங்களும் உண்டு. இவற்றில் இரண்டாவது ரகத்தைச் சேர்ந்தவன் ரட்சகன்.

இப்போதெல்லாம் எந்த ஓர் அலுவலகச் சிப்பந்திகளும் 'ஸ்ட்ரைக்' செய்யாமல் காலம் தள்ளினாலும் தள்ளுவார்களே தவிர, தங்களுக்கென ஒரு 'ரிக்ரியேஷன் கிளப்' இல்லாமல் அவர்களால் இருக்கவே முடியாது. இதற்கு அந்தக் கால்நடைத் தீவன விநியோகக் காரியாலயம் மட்டும் விதிவிலக்காகி விட முடியுமா?

ரட்சகன் அந்த ஆபீஸில் வேலைக்குச் சேர்ந்ததும் முதல் காரியமாக அங்குள்ள சிப்பந்திகளைச் சேர்த்து ஒரு 'பொழுதுபோக்குச் சங்கத்தை' ஆரம்பித்தான். அதற்கு அவனே தலைவனாகவும் தேர்ந்தெடுக்கப்பட்டான். அவனுக்குப் பள்ளியில் படித்த நாட்களிலேயே கொஞ்சம் நாடகப் பைத்தியம் உண்டு. அந்தப் பைத்தியம் இந்தச் சங்கத்தை ஆரம்பித்ததால் புதிய வேகம் பெற்றது. அவனைப் போன்ற இன்னும் சில 'பைத்தியங்களும்' அங்கே இருந்ததால் அவைகளெல்லாம் ஒன்று சேர்ந்து முடுக்கிவிட, அவன் துணிந்து ஒரு சமூக நாடகத்தைத் தீட்டி முடித்தான். நாடகத்தின் பெயர் 'லவ் இன் வாஷர்மென்பட்'! அந்த நாடகத்துக்குக் கதை, வசனம், பாடல்களைத் தீட்டிய அவனே டைரக்ஷன் பொறுப்பையும் ஏற்றுக் கொண்டதோடு கதாநாயகன் வேஷத்தையும் தாங்கிக் கொண்டான். அவனுடைய சக டைப்பிஸ்ட் நீலமணி என்பவன் கதாநாயகியானான். இரண்டு மாத காலம் நாடக ஒத்திகைகள் காப்பி டிபனோடு பிரமாதப்பட்டன.

ஒரு சுபயோக சுப தினத்தில் 'லவ் இன் வாஷர்மென்பட்' நாடகம் மந்திரி ஒருவரின் தலைமையிலும், சினிமா நடிகர் ஒருவரின் முன்னிலையிலும் ஜாம் ஜாம் என்று அரங்கேறியது. அன்றே ரட்சகனையும் சனி பிடித்தது!

**ஜெகசிற்பியன்**

ஆமாம்; மாலை போட்டுக் கொள்ள வந்த மந்திரி அதோடு திருப்தியடைந்து எழுந்து போகாமல், தாம் பாதியில் பார்த்த நாடகத்தையும், அதில் கதா நாயகனாக நடித்த ரட்சகனையும் பற்றி நாலு வார்த்தைகள் பாராட்டிப் பேசிச் சென்று விட்டார். 'நிதானமில்லாமல்' வந்திருந்த நடிகரும் அதே மாதிரி ஏதோ வாய்க்கு வந்ததைச் சொல்லி விட்டுப் போலீஸ் பாதுகாப்புடன் போய்க் காரில் ஏறிப் பறந்துவிட்டார்.

ரட்சகனின் தலையில் ஒரே கனம்! அவனால் குனிந்து நடக்கவே முடிய வில்லை. கள் குடித்த குரங்கின் தலையில் ஈச்சங்காட்டுப் பேயும் ஏறி உட்கார்ந்து விட்டால் என்ன ஆகும்? அடுத்து ஒரு நாடகம், அப்புறம் ஒரு நாடகம்; நாலா வதாக ஒரு நாடகத்தை நடத்தி முடித் ததுமே ரட்சகனின் நண்பர்கள் அவனை 'மார்லன் பிராண்டோ' என்று கூப்பிட் டுச் சிண்டு தட்டி விட்டார்கள்.

அவ்வளவுதான்; இனியும் தான் இந்தக் கம்பெனியில் கேவலம் ஒரு ஸ்டெனோவாக வேலை பார்த்துக் கொண் டிருப்பது நாடகக் கலைத் தாய்க்குச் செய்யும் மிகப் பெரிய துரோகம் ஆகும் என்று எண்ணிய ரட்சகன் தனது முழு நேரத்தையும் நாடகக் கலைக்காகவே அர்ப்பணிப்பது என்ற தீர்மானத்துடன் உடனே அவ்வேலையை உதறியெறிந்து வெளியேறி வந்துவிட் டான். மாத வருமானம் இருநூறு ரூபாய் போய்விட்டதே என்று அவன் ஒன்றும் கவலைப்படவில்லை. காரணம், அவனுடைய மாமனார்தான் 'பச்சைப் பசுமையாக' இருந்து வருகிறாரே!

பல்வேறு அலுவலகங்களில் வேலை பார்க்கும் தன் நண்பர்கள் சிலருடன் கூட்டுச் சேர்ந்து, 'நாகரத்தினம் நாடக மன்றம்' என்பதாக ஒன்றை ஆரம்பித்து அதன் முழு நேர இயக்குநரானான் ரட்சகன்.

மாமனாரின் பெயர் நாகரத்தினம்! நன்றி மறப்பது நன்றல்ல அல்லவா? அத்துடன் மாமனார் தலையில் 'ஐஸ்' வைக்கும் நோக்கமும் அதில் அடக்கம்!

ஆனால் அந்த மாமனாருக்கும் தம் மாப்பிள்ளையின் இந்தப் போக்கை அதிக காலம் பொறுக்க முடியாமல் போகவே, கொஞ்சம் ஜாடைமாடையாகப் பல் லைக் கடிக்கக் கையைப் பிசைய ஆரம் பித்தார். தம் 'பாங்க் பாலன்ஸ்' வேக மாய்த் தேய்மானமாகி வருகிறதே என்ற கவலை அவருக்கு!

தந்தையின் லேசத்தைப் புரிந்து கொண்ட மகளுக்கோ ரோஷம் பொத் துக் கொண்டு வந்து விட்டது. ''என் கணவர் சம்பாதிக்கவில்லையே என்று நீங்கள் ஒன்றும் கவலைப்பட வேண்டாம். அவருக்குப் பதி லாக நான் சம்பாதித்துத் தருகிறேன்!'' என்று சூள் உரைத்த அவள் ஒரு விளம் பர ஆலோசகக் கம்பெனியில் 'ரிஸப்ஷனிஸ்'டாக வேலைக்கு அமர்ந்து விட்டாள். ரட்சக னுக்கு இருந்த கொஞ்ச நஞ்சக் குளிரும் விட்டது. அவன் இப் போது நாடகக் கலாதேவியின் முழு நேரத் தொண்டன்!

மூன்று மாதங்களுக்கு ஒரு முறையாவது முத்துசிவனைத் தவறாமல் பார்க்க வந்து விடு வான் ரட்சகன். காரணம், தான் நடத்தப் போகும் ஏதாவதொரு நாடகத்தின் டிக்கட்டை அவன் தலையில் கட்டிவிட்டுப் போகத்தான்.

அவனை அவன் எங்கே, எப் போது சந்தித்தாலும், அவ னுடைய கையில் ஏதேனும் ஒரு நாடகக் கதை வசனம்





எழுதப்பட்ட நோட்டுப் புத்தகமும், ஜேபியில் அந்நாடகத்துக்குரிய டிக்கட் புத்தகமும் இருப்பதைப் பார்க்கத் தவறியதே இல்லை. இவற்றுடன் அவன், ''மன்னிக்கணும் சார்! இப்ப நான் எங்க நாடகத்துக்கு ஹீரோயினை புக் பண்ணப் போய்க்கிட்டிருக்கிறேன்; இன்னொரு நாள் உங்களைச் சாவகாசமாக வந்து மீட் பண்ணறேன்'' என்று பெருமையோடு சொல்லி விட்டுப் போவதையும் கேட்கத் தவறியதில்லை. தன் காரியாலயத்தில் தனக்குக் கீழே கொஞ்ச காலம் வேலை செய்துகொண்டிருந்தவன் என்பதற்காக மட்டுமின்றி அவனது வெகுளியான சுபாவம், கபடமில்லாத பேச்சு, கள்ளமில்லாத சிரிப்பு, ஒரு

காசுக்கும் உபயோகப்படாத காரிய மானாலும் அதிலே கொண்டுள்ள தீவிர ஈடுபாடு, அதைப் பற்றிப் பேசும்போது காட்டுகிற உற்சாகம், அசட்டுத்தன மான நம்பிக்கை, அலங்கார ஜபர் தஸ்தான நடை உடை பாவனைகள் ஆகியவையும் சேர்ந்து அவன்மீது முத்துசிவனுக்கு அநுதாபம் கலந்த ஓர் அன்பு உணர்ச்சியை ஏற்படுத்திவிட் டிருந்தன. அதனால் அவனை எங்கே கண் டாலும் சில நிமிடங்களாவது நின்று பேசிவிட்டுப் போவான்; அவன் கிழித் துத் தருகிற டிக்கட்டையும் 'முன் ஜன் மத்தில் பட்ட கடன்' என்ற நினைப் போடு மறுக்காமல் வாங்கிக் கொள் வான்.

ஏனென்றால், முத்துசிவனுக்கு நாட கம், சினிமா, சங்கீதம், நாட்டியம் என் பனவெல்லாம் கடந்த காலக் கனவுகள்; எதிர்கால அதிசயங்கள்; பதினைந்து ஆண்டுகளுக்கு முன் இவற்றை அவன் பார்த்தும் கேட்டும் அநுபவித்திருக்க லாம். ஆனால் இந்த அநுபவங்களை இப்போது நினைத்துப் பார்த்தால் கூட அவனுக்கு நினைவில் தட்டுப்படுவ தில்லை. அவ்வளவுக்கு அவை மறந்து போன விஷயங்களாகி விட்டிருந்தன. மனச் சந்துஷ்டிக்காக, உல்லாசத்துக் காக, ஓய்வுக்காக, நிம்மதிக்காக என்று அவன் கொஞ்ச நேரத்தையும் ஒதுக்கி யது கிடையாது; ஒதுக்க வேண்டு மென்று எண்ணியதுமில்லை. பொழுது போகாமல் இருந்தால்தானே பொழு தைப் போக்க எதையாவது நாடிச் செல்ல வேண்டும்? அவனுக்குப் பொழுது இறக்கை கட்டிக் கொண்டு பறந்தது. எப்போதாவது சில சமயம் அபூர்வமாகக் கொஞ்சம் ஓய்வு கிடைத் தால் அந்த நேரத்தில் வீட்டுக்குக் கறிகாய் வாங்கி வரப் பையை எடுத் துக் கொண்டு கிளம்பி விடுவான்; அல் லது தன் தம்பி தங்கைகளின் துவைத்த துணிகளுக்கு 'இஸ்திரி' போட்டுக் கொடுப்பதிலோ, வீட்டில் பழுதாகிக் கிடக்கும் சாமான்களை எடுத்து வைத் துக் கொண்டு ரிப்பேர் செய்வதிலோ உற்சாகமாக ஈடுபட்டு விடுவான்.

இப்படிப்பட்டவனிடம் ரட்சகன், தான் போடும் நாடகங்களுக்கெல்லாம் தவறாமல் டிக்கட்டைக் கிழித்துக் கொடுத்துக் கொண்டிருந்தால் அவற்றை வாங்கி வைத்துக்கொண்டு பாவம், அவன் என்ன பண்ணுவான்? மூக்கால் அழுது கொண்டே வாங்கும் அந்த டிக் கட்டுகளைத் தன் தம்பிகளிடமோ தங்கை களிடமோ கொடுத்து விடுவான். அப் புறம் அவர்கள் நாடகம் பார்க்கப் போனார்களா, இல்லையா என்பதை யும் கவனிக்க மாட்டான். ஞாபகம் இருந்தால்தானே கவனிப்பதற்கு?

இத்தகையதோர் இயந்திர மனித னாக இயங்கி வந்த அவனிடம் இப் போது ரட்சகனின் நாடக டிக்கட் ஒன்று வந்து சிக்கிக் கொண்டு விட்டது. ஒரு ரூபாய் இரண்டு ரூபாய் அல்ல; பத்து ரூபாய் டிக்கட் அது!

அதை வைத்துக் கொண்டு அவன் என்ன செய்வான்? முன்னைப் போல் அவனுடைய தம்பி, தங்கைகள் கூட இன்று வீட்டில் யாரும் இல்லையே!

நேற்று கேட்டிருக்க வேண்டிய கேள்வி இது. இன்று இக் கேள்விக்கு அவனே விடையாகிவிட்டான். ஆமாம்! அவன் அந்த நாடகத்துக்குப் போவ தெனத் தீர்மானித்து விட்டான்.

மணி ஐந்தரை. முத்துசிவன் மீண்டும் ஒரு முறை தலை வாரி, முகத்தில் இலே சாகப் பவுடரும் பூசிக் கொண்டு, அறையை விட்டு வெளியே வந்தான்.

அவனுக்காக இந்நேரம் காத்துக் கொண்டிருந்தவள்போல், அன்னபூரணி யம்மாள் இரண்டு தபால் கடிதங் களைக் கொண்டு வந்து அவனிடம் கொடுத்துவிட்டு ஆவலுடன் அவனைப் பார்த்தவாறு கதவருகில் நின்றாள்.

அந்தக் கடிதங்களில் ஒன்று பெங்க ளூரிலிருந்தும், இன்னொன்று குண்டக் கல்லிலிருந்தும் வந்திருந்தன. மைதிலி யும் ஜானகியும் தாங்கள் ஊர் போய்ச் சேர்ந்த விவரங்களை அந்தக் கடிதங்களில் எழுதியிருக்கிறார்கள் போலும். பம் பாய்க்குப் போன தில்லைநாதனிட மிருந்து கடிதம் வர இன்னும் இரண்டு மூன்று தினங்களாகலாம்.

தன் கைக் கடிகாரத்தில் மணி பார்த் துக்கொண்டே அந்தக் கடிதங்களை அப்படியும் இப்படியுமாகத் திருப்பிப் பார்த்த முத்துசிவன், ''ஜானகியும் மைதிலியும் எழுதியிருக்கிறாங்க; இருக் கட்டும்மா! அப்புறம் வந்து பார்த்துக் கிறேன்'' என்று சொல்லி அவற்றை மேசையின் மேல் போட்டுவிட்டுப் போய் ஸ்கூட்டரில் ஏறி வெளியே கிளம்பி விட்டான்.

அன்னபூரணியம்மாளுக்குப் பெருத்த ஏமாற்றமாகி விட்டது. தன் பெண்கள் ஊர் போய்ச் சேர்ந்த விவரங்களை அக் கடிதங்கள் வாயிலாக மகன் படித்துக் காட்டுவதைக் கேட்டறியலாம் என்று ஆவலுடன் காத்திருந்தாள் அவள். ஆனால் அவன் அவற்றைப் பிரித்துக்கூடப் பார்க்காமல், போட்டுவிட்டுப் போன

# என்னை மறவாதீர்கள்




நான் தான் உங்கள் ஆயுள் இன்சூரன்சுப் பாலிசி. அன்பு நினைவின் அடையாளம. உங்கள் மற்றும் உங்கள் குடும்பத்தின் பாதுகாப்புச் சின்னம். எனவே, என்னை அடிக்கடி கவனித்துக் கொள்ளுங்கள்.

- சரியான வயது குறிப்பிட்டிருத்தல்
- முகவரி மாற்றம்
- பயனடைபவரின் பெயர்

முதலியவற்றைச் சரிபார்த்துக் கொள்ளுங்கள். நான் உங்களைக் கைவிட விரும்பவில்லை. எனவே, மேற்கூறியவற்றை இன்றே சரி பார்த்துக் கொள்ளுங்கள். குறித்த காலத்திற்குள், உரிய அலுவலகத்தில் உங்கள் இன்சூரன்சுப் பிரீமியத்தை மறக்காமல் செலுத்துங்கள்



**ஆயுள் இன்சூரன்சு**
போல ஆதரவு தருவது
எதுவுமே இல்லை

3-29-12

# பெரிய அளவிலே சமையலா ?
# அவசரமான சமையலா ?
# சிக்கனமான சமையலா ?

## எவ்வகைச் சமையலையும் எளிதாக்குகிறது

# கால்காஸ்




## வீட்டிலே டெலிவரி கொடுக்கப்படுகிறது !

ஏகபோக விநியோகஸ்தர்கள் : **ஈஸ்ட் கோஸ்ட் காஸ் கோ.**
48-9-5, கோ-ஆபரேடிவ் காலனி, துவாரகாநகர், விசாகப்பட்டணம்-4.
டெலி : 3516, கன்னிமாரா அனெக்ஸ், மவுண்ட் ரோடு, மதராஸ்-2.
டெலி: 83428.

**ஏஜெண்டுகள்** : மதராஸ், காக்கிநாடா, விசாகப்பட்டணம், விஜயவாடா, ஏலூரு, குண்டூர், பாலகோல், ராஜமுண்ட்ரி, நெல்லூர், விஜயநகரம், மசூலிப்பட்டணம், சேலம், காட்பாடி, ஓங்கோல், வாரங்கல், பாண்டிச்சேரி, காஞ்சிபுரம், கர்நூல், சித்தூர், திருப்பதி, போபிலி, பார்வதிபுரம், ராமசந்திரபுரம், சோம்பேட்டா, பெர்ஹாம்பூர், நரசராவ்பேட், ஸ்ரீகாகுளம், கூடூர், ஜெய்பூர், கம்பம், ஈரோடு.

**கால்டெக்ஸ் தயாரிப்பு**

தைக் கண்டு அப்படியே திகைப்படைந்து நின்றாள் அன்னபூரணி.

ஃ ஃ ஃ

"சுகுணா டீச்சர் இருக்கிறாங்களா? நான் அவங்களுடைய சிநேகிதி, பார்க்க வந்திருக்கிறேன்."

வராந்தாவில் நின்று தோட்டக்காரனிடம் இடம் மாற்றி வைக்கச் சொல்லிக் கட்டளை இட்டுக் கொண்டிருந்த சொர்ணத்தம்மாள் திரும்பிப் பார்த்தாள்.

நவநாகரிகமான ஆடையணிகளுடன் விளங்கிய ஓர் அழகிய பெண் தயக்கப் புன்முறுவலோடு வந்து வாசற்படிக் கட்டில் ஏறி நின்றாள்.

அந்தப் பெண்ணைச் சற்று நிதானித்துப் பார்த்து, "ஓ!...இஞ்சினியர் நாகரத்தினத்தோட பெண் இல்லே நீ? வாம்மா!" என்று முக மலர்ச்சியுடன் வரவேற்ற சொர்ணத்தம்மாள், "இப்பத்தான் சுகுணா பள்ளிக்கூடத்திலேயிருந்து வந்தாள். மாடியிலே இருப்பாள். போய்ப் பாரேன்" என்றாள்.

'ஆகட்டும்' என்பதுபோல் தலையசைத்த அந்தப் பெண் தான் அணிந்திருந்த குதி உயர் காலணியை உதறி வராந்தாவில் விட்டு விட்டுக் கூடத்து அறையில் பிரவேசிப்பதற்கும், மாடியிலிருந்து சுகுணா கீழே இறங்கி வருவதற்கும் சரியாக இருந்தது.

"வா, வசந்தி! உன்னைத்தான் நினைச்சுக்கிட்டு இருந்தேன்; நீயே வந்துட்டே! ஆச்சரியம்தான்!" என்று மகிழ்ச்சிக் கலகலப்புடன் சொல்லிக் கொண்டே விரைந்து வந்த சுகுணா அந்தப் பெண்ணின் கையைப் பற்றினாள்.

"என்னக்கா இது, உங்களுக்காக அஞ்சு மணியிலிருந்து நான் என் வீட்டிலே காத்துக்கிட்டிருந்தேன். நீங்க என்னடான்னா என்னை நினைச்சுக்கிட்டு இங்கே உட்கார்ந்திருக்கிறதாகச் சொல்றீங்களே!" என்று செல்லக் கோபத்துடன் சிணுங்கிச் சிரித்தாள், வசந்தி என்ற அந்தப் பெண்.

"எனக்காகக் காத்துக்கிட்டிருந்தயா, எதுக்கு?" என்று கேட்ட சுகுணா, "வா, இப்படி உட்கார்ந்து பேசுவோம்" என்றவாறு அவளை இழுத்துக் கொண்டு



"நேற்று சபாவில் என் கச்சேரி நடந்தது. கச்சேரிக்கு வந்திருந்தவர்கள் எல்லோரும் என்னைப் பாராட்டினார்கள்!"

"எல்லோரும் பாராட்டும்படியா என்ன புடவை உடுத்திக் கொண்டு போயிருந்தே!"

போய் ஒரு சோபாவில் தள்ளிவிட்டுத் தானும் பக்கத்தில் அமர்ந்தாள்.

"உட்கார்ந்து பேச நேரம் எங்கே இருக்குது அக்கா? இப்பவே மணி அஞ்சேமுக்கால் ஆகிடுச்சு! எழுந்திருங்க, போவோம்" என்றாள் வசந்தி.

ஏதோ ஒன்றை இப்போதுதான் நினைவுபடுத்திக் கொண்டவள் போல் 'ச்சொ' கொட்டிக் கொண்ட சுகுணா, "அடடே, எனக்கு அது மறந்தே போயிடுத்து!" என்று கூறிக் கலகலவென நகைத்தாள்.

"நல்லாச் சொன்னீங்க, போங்க! இப்படிச் சொல்லுவீங்கன்னு தெரிஞ்சுதான் நேத்திக்கே ஃபோன் பண்ணினேன். நீங்களும் கண்டிப்பா வரேன்னு சொன்னீங்க; அதைக்கூடவா மறந்துட்டீங்க?"

"மறக்கலே, வசந்தி! ஆனால் நான் வரேன்னு சொன்னது உன்னைப் பார்க்கத்தான். நேரிலே உன்கிட்டே ஒரு விஷயமாய்ப் பேசணும்னு நினைச்சேன். அந்தச் சமயம் நீயும் ஃபோன் பண்ணினதாலே சரி வரேன்னேன்."

"அப்போ, நீங்க இப்ப நாடகத்துக்கு வரலையா?"

"நாடகத்துக்கா? ... நானா ...?" என்று கேட்டு அழகாகச் சிரித்தாள் சுகுணா.

வியப்புடன் கண்களை மலர்த்தி அவளை ஏறிட்டுப் பார்த்த வசந்தி, "என்ன அக்கா இப்படிக் கேட்கிறீங்க? காலம்பற எங்க ஆபீஸ் பையன்கிட்ட நான் கொடுத்தனுப்பின காம்ப்ளிமெண்டரி டிக்கட்டைக் கூட வாங்கிக்கிட்டீங்களே! அதை நம்பி நானும் உங்களோடு நாடகத்துக்குப் போகலாம்னு வந்தால் திடீர்னு இப்ப வரமாட்டேங்கிறீங்களே!" என்றாள் வருத்தம் தோய்ந்த குரலில்.

யார் இந்த வசந்தி? சாட்சாத் ரட்சகனின் மனைவிதான் அவள்!

சுகுணாவும் அவளும் ஒரே பள்ளியில் படித்தவர்கள். பள்ளிப் படிப்பு முடிந்து, வெவ்வேறு கல்லூரிகளில் சேர்ந்த பின்னும் அவர்கள் அடிக்கடி சந்தித்துக் கொள்வார்கள். சுகுணாவை விட வசந்தி நாலைந்து வயது இளையவள்.

நோக்கம் எதுவும் இல்லாமல், பி. எஸ்ஸி. படிப்பை மேற்கொண்ட அவள் அதைப் பாதியில் நிறுத்திவிட்டு ரட்சகனைக் கல்யாணம் பண்ணிக் கொண்டாள். கல்யாணம் ஆன பின் அவளுக்குச் சுகுணாவிடம் முன்போல் நெருங்கிப் பழக வாய்ப்பின்றிப் போனாலும் சமயா சமயங்களில் எங்காவது பார்த்துவிட்டால் மணிக் கணக்கில் நின்று பேசித் தீர்த்து விடுவாள். பழகுவதற்கு இனியவள். வெள்ளை மனம் படைத்தவள். யார் எதைச் சொன்னாலும் உடனே நம்பிவிட்டுப் பிறகுதான் அது பற்றிச் சிந்திக்கத் தொடங்குவாள். கொஞ்சம் நாகரிக மோகி. ஆனால் அதை அருவருப்பான நிலைக்கு வளர்த்துக்கொள்ளாமல் அளவோடு நிறுத்திக் கொண்டிருப்பவள். அவளின் அந்தரங்கங்களைப் பெருமளவு சுகுணா அறிவாள். சுகுணாவைப் பற்றிய விவரங்களோ அவளுக்குக் கொஞ்சம்தான் தெரியும். அவற்றில் முத்துசிவனை இவள் காதலிக்கிறாள் என்பதும் ஒன்று. அது போதாதா அவளுக்கு!

''கொடுத்து அனுப்பின டிக்கட்டை வேணாம்னு சொல்லலாமா? அதனால்தான் வாங்கிக்கிட்டேன். மற்றபடி அந்த நாடகத்தைப் பார்க்கணுமிங்கறதுக்காக வாங்கலே. என் சக டீச்சர் ஒருத்திக்கு அதைக் கொடுத்துப் போய்ப் பார்க்கச் சொல்லி விட்டேன்'' என்று இதமாகக் கூறிய சுகுணா, இப்படிச் சொன்னதற்காகத் தன் சிநேகிதி வருத்தப்பட்டுவிடுவாளோ என்று எண்ணியவள்போல் மெல்லச் சிரித்து, ''சரி; உன்னோடு நான் நாடகம் பார்க்க வந்துதான் ஆகணும்னு நீ விரும்பினால் இப்போது வரத் தயார்; கவலைப்படாதே!'' என்றாள்.

இதைக் கேட்டு முகமலர்ந்த வசந்தி, ''அது சரி; நீங்க ஏன் முதல்லே வர மாட்டேன்னீங்க? நாடகம், சினிமா எல்லாம் பார்க்கிறதில்லையா? பார்க்கப் பிடிக்காதா?'' என்று கேட்டாள்.

''பதில் சொல்லச் சங்கடமான கேள்வியைக் கேட்டுவிட்டாயே!'' என்று கூறிக் கலீர் எனச் சிரித்தாள் சுகுணா. ''பார்க்கப் பிடிக்கும்; ஆனால் பார்க்கிறதில்லை.''



''லாட்டரி பிரைஸ் லட்ச ரூபாய் விழுந்திருக்கு எனக்கு. சந்தோஷம் படாமெ தலையிலே கையை வெச்சுக்கிட்டு அழுது வடியறியே!''
''போதும், உங்க லட்சமும் நீங்களும்; எதிர் வீட்டுக்காரருக்கும் பத்தாயிரம் ரூபாய் பரிசு விழுந்திருக்கே!''

''நானும் ரொம்ப நாட்களாகவே கேட்கணும்னு இருக்கிறேன். ஏனக்கா அப்படி?''

''இது இன்னொரு சங்கடமான கேள்வி!''

''எவ்வளவு காலமாகப் பார்க்கிறதில்லே?''

''அது ஆச்சு, கிட்டத்தட்ட பத்துப் பன்னிரண்டு வருஷம்...''

''ஓ!... புரிஞ்சுக்கிட்டேன், புரிஞ்சுக்கிட்டேன்!'' என்று கை கொட்டிக் கலகல வெனச் சிரித்தாள் வசந்தி.

அவள் புரிந்து கொண்டதாகச் சொன்னதை எங்கே தனக்கும் புரியும்படி சொல்ல ஆரம்பித்து விடுவாளோ என்று பயந்தவள் போல் சட்டென்று எழுந்த சுகுணா, ''அடடே! என் அருமை வசந்திக்குக் காப்பி டிபன் கொடுக்காமல் இவ்வளவு நேரம் சும்மா உட்கார வைச்சுப் பேசிக்கிட்டு இருக்கிறேனே! இரு, இதோ ஒரு நிமிஷத்தில் வந்துடறேன்'' என்றவாறு உள்ளே போகத் திரும்பினாள்.

''வேணாம் அக்கா, வேணாம்! அதையெல்லாம் நான் வீட்டிலே முடிச்சுக்கிட்டுத்தான் வெளியே கிளம்பினேன்'' என்று சொல்லிக் கொண்டே தாவிச் சுகுணாவின் கையைப் பிடித்து இழுத்துத் தன் பக்கத்தில் உட்கார வைத்துக் கொண்டாள் வசந்தி. அவளுக்கு அந்த உபசார மொழிகளில் உச்சி குளிர்ந்து போனதாலோ என்னவோ சற்று முன் தான் கேட்ட கேள்வியை மறந்துவிட்டு, ''அது போகட்டும்; என்கிட்ட ஏதோ தனியாகக் கேட்கணும்னு நினைச்சதாச் சொன்னீங்களே, அது என்ன அக்கா?'' என்று வேறு விஷயத்துக்குத் திரும்பி விட்டாள்.

சுகுணாவின் பார்வை வீட்டினுள்ளும் வெளியிலுமாகச் சென்றது. அவளுடைய அம்மா வராந்தாவை விட்டுக் கீழே இறங்கிப் போய்ப் பூச்செடிகளண்டை ஏதோ செய்து கொண்டிருந்தாள். கனகசபை இன்னும் தொழிலகத்திலிருந்து வீடு திரும்பவில்லை.

''அப்படி ஒண்ணும் அது பெரிய விஷயமில்லே, வசந்தி! சும்மா ஒரு சின்னத் தகவல் தெரிஞ்சுக்க நினைச்சேன், அவ்வளவுதான்!'' என்ற பீடிகையுடன் ஆரம்பித்தாள் சுகுணா. **(தொடரும்)**

# புதிய

# ஸூப்பர் ஸர்ஃப்

## சலவை: சொல்லொண்ணாத அமோக வெண்மை




அமோகமான சலவைத் திறன், எல்லைமீறிய வல்லமை: அதுதான் ஸூப்பர் ஸர்ஃப். எத்தகைய அழுக்கையும்—கண்மறைவான அழுக்கைக் கூட—விரட்டியடிக்கும். அடுத்து, உங்கள் துணிகளுக்குக் கண்ணைப் பறிக்கும் வெளுப்பு, கற்பனை கடந்த வெண்மை. வெண்மையூட்டும் பவுடர் எதுவும் சேர்க்கத் தேவையில்லை. எப் பெரிய சலவைச் சுமையையும் எளிதில் வெளுத்திடலாம்—இன்பமாக. சலவையிலே ஒரு நறுமணமே கமழக்காண்பீர்கள். இத்தனை நன்மைகளையும் தரக் கூடிய பவுடர் வேறெது?

இந்துஸ்தான் லீவரின் தரமான தயாரிப்பு

லின்டாஸ்-SU.55-140 TM



# ராதே உனக்குக் காதல் ஆகாதடி!

''ம்ஸ்....!''

சட்டெனத் திரும்புகிறாள் அவள்.

''ஹி.... ஹி.... குடை....!'' அவன் கையில் அவளுடைய பிளாஸ்டிக் குடை! குடையுடன் தன் எவர்சில்வர் ரொட்டி டப்பாவைப் பஸ்ஸில் விட்டுச் சென்றது, அவள் ஞாபகத்துக்கு வருகிறது.

வெடுக்கென்று அவள் குடையைப் பிடுங்கிக் கொண்ட வேகம், அவன் முகத்தில் அசட்டுச் சிரிப்பொன்றை வரவழைக்கிறது. திரும்பிக்கூடப் பார்க்காமல் போகும் அவளைப் பார்த்துக் கொண்டேயிருக்கிறான். ஏதோ நினைத்தவனாக அவளைத் தொடருகிறான்.

''ஒரு.... ஒரு தாங்க்ஸ்கூடச் சொல்லாமல் போகிறீர்களே....?''

அருகில் அவன் குரலைக் கேட்டு அவள் திரும்புகிறாள். முகத்தில் எள் போட்டால் கரிந்து போயிருக்கும்!

''ஓஹோ.... அதுக்காகத்தான் இவ்வளவு நேரம் எனக்குத் துணை வந்தீர்களா? தாங்க்ஸ்.... போதுமா....?'' அவள் அதை அழுத்திச் சொன்ன போது, அவன் முகத்தில் பழைய அசட்டுக் களை வழிந்தது!

ஒரு விநாடி அவன் முகம் கறுத்தது!

''ரொம்ப நன்றி.... இனி நான் போகலாமல்லவா....?''

''தாராளமாக...!'' என்று சினிமாக் கதாநாயகனைப் போல் இரு கைகளையும் விரித்துக் காண்பிக்கிறான் அவன்.

அவள் வேகமாக நடக்கிறாள். தொடர்ந்து யாரோ வரும் ஓசையில் திரும்புகிறாள்.

அவன்தான்!

அவள் சட்டென்று நிற்கிறாள்.

''இன்னும் என்ன.....?'' என்று கேட்கிறது, அவள் பார்வை.

''ம்.... வந்து.... இனிமேல் சாமான்களை இப்படிக் கண்டபடி வைத்து விடாதீர்கள்... ஊர் கெட்டுக் கிடக்கிறது...!'' அவனுடைய அசட்டு விழிகள் அவளை நோக்கிய விதம் கண்டு அவள் பல்லைக் கடிக்கிறாள்! பக்கா அயோக்கியனாயிருப்பான் போலிருக்கிறதே!

விருட்டென்று பக்கத்திலுள்ள போலீஸ் ஸ்டேஷனுக்குள் நுழைகிறாள். அவள் மட்டுமா.... அவனும்தான்!

இவனைச் சும்மா விடக்கூடாது....! அங்கிருந்த கான்ஸ்டபிள் அருகில் செல்கிறாள். அடுத்து, அவர் தன்னைப் பார்த்து ஸல்யூட் அடித்த போது அவள் திகைத்தாள்!

சட்டென்று கான்ஸ்டபிள் சீட்டில் உட்கார்ந்து கொள்கிறார்.

''என்னம்மா விஷயம்?''

''வந்து.... ஒரு... இதோ, இந்த அயோக்கியன்.... எனக்கு உதவி பண்ணுவது போல் வந்து, என்னைச் 'சேஸ்' பண்ணுகிறான்!''

''அப்படியா?'' கான்ஸ்டபிள் கண்கள் கூர்மையாகின்றன. ''என்னம்மா... ஏதாவது கலாட்டாச் செய்தாரா..?''

''இல்லே. இந்த டிபன்பாக்ஸை எடுத்துக் கொடுப்பது போல் வந்து, என்னை 'ஃபாலோ' பண்ணுகிறான்....!''

''அப்படியா....? நீங்க போங்க.... நான் கவனிச்சுக்கிறேன்!''

வெற்றி அவள் இதழ்களில் தவழ்ந்தது. அமைதியாக அவன் கூறினான்: ''மூந்நாத்தி ரெண்டு, இந்த அம்மாவை 'லாக் அப்'பிலே வை.... தன்னை யாரோ தொடருகிறாங்கன்னு சந்தேகம் ஏற்பட்டு இந்த அம்மா, டிபன்பாக்ஸை வேணுமின்னே பஸ்ஸிலே தவற விட்டது. நான் எடுத்துக் கொடுத்ததிலே ஆத்திரம்! பாவம், நான் ஏதோ அயோக்கியன்னு நினைத்துத் தானாகவே போலீஸ் ஸ்டேஷனுக்கு வந்து, என் வேலையைக் குறைச்சுடுச்சு....!''

அவன் ஒரு நாற்காலியில் அமர்ந்தவாறே தொடருகிறான்: ''நடுவழியிலே நான் பிடிச்சிருந்தாக்கூட, கூட்டம் கூட்டித் தப்பிச்சுக்கிட்டுப் போயிருக்கும்!''

கான்ஸ்டபிள் அவனையும் அவளையும் மாறி மாறிப் பார்த்தார்!

''என்ன மூந்நாத்திரண்டு.... ஒண்ணும் புரியல்லையா....? அந்த டிபன்பாக்ஸைத் திறந்து பார்.... இது வேலை பார்க்கிற கம்பெனியைப் பற்றியே எனக்கு ஒரு சந்தேகம்! கடத்தல் சாமான்கள் எப்படியோ வந்து போவதாகக் கேள்வி. இதோ, இந்தம்மாதான் அங்கே கிளார்க், ஸ்டெனோ எல்லாம்.... காலையில் சாப்பாட்டோடு வரும் டிபன் பாக்ஸ் மாலையில் கடத்தல் கைக் கடிகாரங்களைச் சுமந்துக்கிட்டுப் போகும்.... எப்படி ஐடியா.....? யாராவது சந்தேகப்பட முடியுமா......?'' என்றார் அவர் — அந்த ஸி.ஐ.டி. இன்ஸ்பெக்டர்.



கமலா தோதாத்ரி

# தெய்வ மணம்

எஸ். ரங்கநாயகி

மகள் பானு இப்படி உறுதியிட்டுச் சொல்லுவாள் என்று சாமிநாதன் எதிர்பார்க்கவில்லை. பெற்றோர்களிடம் அன்பும் பண்பும் கொண்ட மகள் இந்த விவாக விவகாரத்தில் பிடிவாதமாக நிற்பதாகத் தான் தாயார் சங்கரி உணர்ந்தாள்.

''பானு! நமக்கும் அந்தப் பிள்ளை மூர்த்திக்கும் சரிப்பட்டு வரும் என்று நினைக்கிறாயா....?''

அம்மா கேட்ட கேள்வி பானுவுக்குப் புரிகிறது. மூர்த்திக்கும் அவர்கள் குடும்பத்துக்கும் கொள்கை கோட்பாடுகளில் ஆகாயத்துக்கும் பூமிக்கும் உள்ள தொலைவு. பானு தந்தையின் கொள்கையையே பின்பற்றுபவள். அவருடைய சீரிய உயர்ந்த கொள்கையைக் கண்டு வியந்திருக்கிறாள்.

பரம்பரை பரம்பரையாக, ஆலயத்தில் ஆண்டவனின் திருநாமங்களைச் சொல்லிக் கொண்டு, அவனுக்கு உள்ளமுருக அர்ச்சனை செய்வதே சாமிநாதனின் முன்னோர்களின் தொழில். அந்தக் குலத்தொழிலையே சாமிநாதனும் சிரத்தையுடன் ஏற்றிருந்தார். குடும்பம் பெரிதில்லை. பானு ஒருத்திதான் மகள். அர்ச்சகத் தொழிலில் அதிக வரும்படி இல்லாவிடினும் அமைதியுடன் குடும்பம் நடந்து வந்தது. அதன் பிறகு, எளிய வாழ்க்கை நடத்திய சாமிநாதனுக்குத் திடீரென்று கூரையைப் பிய்த்துக் கொண்டதாக அதிர்ஷ்டம் தேடி வந்தது. அவருடைய தூரத்து உறவினர் ஒருவர், வாரிசு இல்லாத தம் சொத்து முழுவதுக்கும் சாமிநாதனையே வாரிசாக்கினார். அவர் இருந்த கிராமத்திலேயே நிறைய நிலங்கள். பட்டினக் கரையில் பெரிய வீடு இருந்தது.

செய்தி கிடைத்தபோது அவர் ஆண்டவனின் அர்ச்சனையில்தான் ஈடுபட்டிருந்தார். வாழ்த்துக்கள் கூறியவர்களுக்கு 'ஆண்டவனின் செயல்' என்று மட்டும் கூறினார் பதிலுக்கு.

இனி இவர் கோவிலில் அர்ச்சகத் திருப்பணியை விட்டுவிடுவார் என்றுதான் அனைவரும் எதிர்பார்த்தனர். அவரோ கோவிலுக்குச் செல்வதை நிறுத்தவில்லை. இன்னும் கவனமாகப் பக்தர்களின் செவிகளைத் தொட்டு உள்ளத்தை எட்டும்படி இரைந்து அர்ச்சனையை உச்சரித்துச் சொல்கிறார். ஆலயங்களைப் புதுப்பிக்கச் செலவிடுகிறார். 'அர்ச்சகர்' என்றே தம்மைப் பெருமையாகச் சொல்லிக் கொண்டார்.

''இந்த ஆளுடைய கஞ்சத்தனம் போகாது. ஐயா! அர்ச்சகத் தொழிலில் வரும் வரும்படியை விடக் கூடாது என்ற பேராசை.''

சிலர் பரிகாசமாகவும் சிலர் மறைவாகவும் அவரைப் பற்றிக் கூறினார்கள். அவரும் கோபிக்காமலே கேட்டுக் கொண்டார். அவர்களுக்கு அவர் நேரிடையாகப் பதில் கூறியதில்லை. வீட்டுக்கு வந்து பொதுவாக, யாரோ கேட்கும் கேள்விகளுக்கு விடை சொல்வதாக நாடக வசன பாடத்தை இரைந்து சொல்லிக் கொள்ளும் நடிகனாகப் பேசிக் கொள்வார். ''அப்பனே, ஆண்டவா, பணத்தைக் காட்டி என்னைச் சோதிக்கிறாய். நானா ஏமாறுவேன்? இந்த அழியும் பொருளில் மயங்கி, அழியாச் செல்வமான பக்தியைத் துறந்து விடுவேனா? உன் நாமாவே கலகலத்துக் கொட்டும் தங்கக் காசுகள் என்பது எனக்குத் தெரியும்....''

பக்திச் செல்வத்தைக் கெட்டியாகப் பிடித்துக் கொண்டு தெய்வமே உலகம் எனச் சாமிநாதன் இருப்பவர். அவருடைய மனைவியும் மகளும் சாமிநாதனின் வழியையே ஆழமாகப் பின்பற்றுபவர்கள். பானு கல்வியிலும், சங்கீதத்திலும் தேர்ச்சி பெற்றுவிட்டாள். தான் கற்ற கல்வியைத் தெய்வத்தின் கதைகளைப் படிப்பதிலும், சங்கீதத்தை அவன் புகழ் பாடுவதிலும் செலவிட்டு எந்த நேரமும் தெய்வ சிந்தனையிலேயே காலத்தைக் கழித்து வருபவள்.

இந்தப் பெண் பானு, தெய்வமே உலகம் என்று ஒவ்வொன்றிலும் தெய்வத்தைக் கண்டு மகிழ்பவள், எவ்விதம் தெய்வத்தையே நம்பாத, தெய்வத்துக்கு வணங்காத மூர்த்தியைத் தன் மணாளனாகத் தேர்ந்தெடுக்க முடியும்? குலம் கோத்திரம் வகையில் மூர்த்தி அவர்களுக்கு ஏற்ற வரன்தான். எனினும், தெய்வத்தை நம்பாதவனிடம் பானுவை ஒப்படைக்க முடியுமா?

மூர்த்தியும் அவர்கள் வசித்த ஊரிலேயே இருக்கிறான். பட்டப் பரீட்சைகளை வெற்றிகரமாக முடித்து விட்டவனாக இருந்தாலும், விவசாயத்தில் தன் முழுக் கவனத்தைச் செலுத்தினான். இரண்டு சொத்துக்கு ஒரே அதிகாரி. கார் வைத்திருந்தான். பணமாகவும், நிலமாகவும், வீடுகளாகவும் இருந்தன. தந்தை வைத்துச் சென்ற சொத்துக்களைத் தன் கல்வி அறிவை உபயோகித்து அதிகமாக்கினவன். வீட்டில் தாயார் சொர்ணம் மட்டும் துணை. அவளோ தெய்வத்தினிடம் ஆழமாகப் பக்தியும் பற்றுதலும் கொண்டவள். மகனோ, ''தெய்வமா, அது எங்கே இருக்கிறது?'' என்கிறான்.

சொர்ணம் மகனைத் தெய்வத்தின் வழிக்குக் கொண்டு வர எவ்வளவோ முயற்சி செய்தும் தோற்று விட்டாள். மூர்த்தி கோயிலுக்குப் போகவில்லை. தாயார் வழிபட்ட ஆண்டவன் சிலைக்கோ, படத்துக்கோ கரம் குவித்து வணங்கவில்லை.

சொர்ணம் மகனைக் கட்டுப்படுத்த முயற்சி எடுத்துத் தோற்று விட்டாள். மகனோ தாயாரைத் தன் வழிக்குத் திருப்ப

முயற்சி எடுக்கவேயில்லை. சொர்ணம் பூஜை, வழிபாடு என நிறையச் செலவு செய்தாள். புண்ணிய தீர்த்தங்களுக்குச் சென்றாள். அத்தனைக்கும் மகன் ஏற்பாடு செய்து கொடுத்தான். தாராளமாகச் செலவு செய்யப் பணமும் கொடுத்தான்.

சாமிநாதனின் குடும்பத்துக்கும் மூர்த்திக்கும் பரிச்சயம் ஏற்பட்டது எதிர்பாராத நிகழ்ச்சிதான். ஊர்க் கோயிலை ஜீரணோத்தாரணம் செய்த போது சாமிநாதன் பெரும் பகுதியைத் தம் கையை விட்டுக் கொடுத்தார். மிகுதிப் பணத்துக்கு ஊர் மக்களிடம் வசூலிக்க விரும்பினார். மூர்த்திக்குச் சாமிநாதன் பணம் வசூலிப்பதே தெரியாது. தெய்வத்தை நம்பாத மகன் இந்தப் பணிக்கு உதவ மாட்டான் என்று சொர்ணம் மகனிடம் கூறவேயில்லை.

பணம் கொடுத்த பல செல்வந்தர்கள் இன்னும் நிறையத் தரச் சக்தியுடையவர்கள் எனச் சாமிநாதன் அறிந்திருந்தார். நிதியில் இன்னும் தேவைப்பட்டது. அப்போதுதான் சாமிநாதனுக்கு மூர்த்தியின் நினைவு வந்தது. உடனே கிளம்பினார்.

''மூர்த்தியிடமா போகிறீர்கள் ? அந்த நாஸ்திகன் செல்லாக் காசு தரமாட்டான்'' என்று ஊரார் கூறினர்.

சாமிநாதன் சென்ற போது மூர்த்தி அவரை அலட்சியப்படுத்தவில்லை. இன்முகத்துடன் வரவேற்று அவர் அமரப் பலகை போட்டான். சாமிநாதன் தம் வேண்டுகோளை விடுத்தார்?

மூர்த்தி யோசிக்காமலே பதில் கூறினான். ''நான் பணம் தருகிறேன். ஆனால் இப்போது கையில் பணமில்லை. கொஞ்சம் நெல்லை விற்றுப் பத்து நாட்களில் தருகிறேன்.''

சாமிநாதன் சென்று விட்டார். ''ஏதோ சாக்குப் போக்குச் சொல்லியிருக்கிறான் !'' மற்றவர்கள் கூறியதையே சாமிநாதனும் மனத்தோடு நினைத்துக் கொண்டார்.

பத்து நாட்கள் கழித்துச் சொன்ன சொல் தவறாமல் மூர்த்தி பணத்துடன் சாமிநாதன் வீட்டுக்கே வந்துவிட்டான். ''இந்தாருங்கள், நீங்கள் கேட்ட உதவிப் பணம். நிறைய விலை போகும் என நினைத்தேன். என் அவசரத் தேவையைப் புரிந்து கொண்டு குறைந்த விலைக்கு எடுத்துக் கொண்டார்கள். பாங்கிலும் உடனே எடுக்க முடியாத நிலையில் பணம் இருப்பதால், நெல் விற்ற பணம் மட்டும்தான் கொடுக்க முடிந்தது.....''

''இது போதும், அப்பா!'' என்று சாமிநாதன் கூறிவிட்டார். இந்த நாஸ்திகன் அளித்திருந்த உதவி, மற்றவர்களுடைய இலக்கத்தைவிடப் பல மடங்கு அதிகமாகவே இருந்தது.



புறப்படுவதற்கு முன் மூர்த்தி தாகத்துக்கு நீர் கேட்டபோது பானு எடுத்து வந்து தந்தாள்.

''பானு! நீ இவருடைய மகளா ? எனக்குத் தெரியாதே!'' என்று மூர்த்தி முகம் மலரக் கூறினான்.

''ஆமாம், நீங்கள் எங்கே இப்படி...?'' பானுவும் கூச்சமில்லாமல் பேசுகிறாள்.

இருவரும் தொடர்ந்து பேசிக் கொள்கிறார்கள். சாமிநாதன் கேட்டுக் கொண்டிருந்தும் தடுக்கவில்லை. மூர்த்தியும் பானுவும் ஒரே பள்ளியில் படித்தவர்கள் என்று அவர்கள் உரையாடலிலிருந்து அவர் புரிந்து கொள்ள முடிகிறது.

மூர்த்தி விடைபெற்றதும் பானு பெற்றோர்களிடம் கூறினாள்: ''அப்பா! ஒரு முறை என் சிநேகிதி பட்டு சில கயவர்களின் கையில் சிக்கி மானத்தை இழக்கும் நிலையிலிருந்த போது ஒருத்தர் ஓடி வந்து அவளைக் காப்பாற்றித் தம் தலையில் அடிபட்டுக் கொண்டு ஒரு மாதம் படுக்கையில் இருந்தார் என் பேனே, அவர் இவர்தான்!''

''இந்த உத்தமப் பணி செய்ததற்குத் தெய்வம் அவனை வாழ்விக்கும் அம்மா !'' என்றார் சாமிநாதன்.

'' தெய்வம் என்று அவனிடம் சொல்லாதீர்கள். அவன் தெய்வத்தை நம்புவதில்லையாம்'' என்றாள் சங்கரி சிரித்தபடியே.

கும்பாபிஷேகம் கோலாகலமாக நடந்தது. ஜீர்ணோத்தாரணத்துக்காக நெல்லைக் குறைந்த விலைக்கு விற்றுப் பணம் கொடுத்த மகன் கண்டிப்பாகக் கும்பாபிஷேகத்தில் பங்கெடுப்பான் எனச் சொர்ணமும் மற்றவர்களும் எதிர்பார்த்தனர். ஆனால் அவன் போகவில்லை.

மூர்த்தி கும்பாபிஷேகத்தில் பங்கெடுக்காததால் மற்றவர்கள் ஏசினது போல் சாமிநாதன் ஏசவில்லை.

அதன் பிறகும் மூர்த்தி அடிக்கடி சாமிநாதனின் வீட்டுக்கு வரும் வாய்ப்பு ஏற்பட்டது. இருவர் நிலங்களும் அடுத்தடுத்து இருந்தன. டிராக்டர் போட்டு உழும் முயற்சியில் மூர்த்தி சாமிநாதனுடைய நிலங்களுக்கும் சேர்த்துக் கணக்குப் போட்டுக் கூட்டுறவு முறையில் செலவு குறைவதைக் கண்டான். சாமிநாதனை உத்தரவு கேட்டான். அவரும் ஒப்புக் கொண்டார். இதனால் இருவரும் அடிக்கடி சந்தித்த போதும், சாமிநாதன் மூர்த்தியின் நாஸ்திகத்தைக் கண்டிக்கவில்லை. மூர்த்தியும் சாமிநாதனின் ஆஸ்திகப் போக்கை எள்ளி நகையாடவில்லை. தங்கள் தங்கள் போக்கில் தீவிரவாதிகளாகவே அவர்கள் இருந்தனர். பானுவும் மூர்த்தியும் ஒருவரோடு ஒருவர் சரளமாகப் பேசுவதைச் சாமிநாதன் கண்டிக்கவில்லை. தெய்வத்தையே நம்பாத ஒருவனிடம் பானு நெருக்கம் காணமாட்டாள் என்றுதான் அவர் உறுதியாக இருந்தார்.

பானு தன் விருப்பத்தைக் கூறிய போது சாமிநாதன் இடிக்கிட்டு விட்டார். 'இந்தச் சம்பந்தம் சரிப்பட்டு வருமா?' எனச் சங்கரி கேட்டபோது பானு சட்டென்று பதில் சொல்ல முடியாமல் தவித்தாள்.

சாமிநாதன் தெய்வசந்நிதியில் சகுனம் பார்த்தார். சாதகமான பதில் வந்ததுகூட அவருக்கு வியப்பாக இருந்தது. தெய்வமே அனுமதி கொடுத்துவிட்டபோது இனி தயங்கக் கூடாது.

மூர்த்தியும் பானுவைச் சந்தித்த போது வியப்புடன் கேட்கிறான். ''பானு, உன் முடிவு எனக்கு ஆச்சரியமாக இருக்கிறது. நான் தெய்வத்தை நம்பாதவன்.... நீ....''

''கொஞ்சம் இருங்கள்.... நீங்கள் ஏன் நம்பவில்லை ?''

'' காணாத தெய்வத்துக்கு உருவம் கொடுத்து நம்பிக்கை வைப்பது எனக்கு ஏற்கவில்லை. நீயோ உன்னுடைய வாழ்வே தெய்வம் தந்தது என்பவள். என்னை நீ விரும்ப முடியுமா?''

''அப்படியானால் நான் உங்கள் வாழ்க்கையில் புகுந்தால் மாறுபட்ட கொள்கை உடையவள் என்பதற்காக நீங்கள் என்னை வெறுத்து விடுவீர்களா?''

''அப்படியில்லை. எனக்கு வெறுப்பு உணர்ச்சி எடுக்கத் தெரியவில்லை. அப்படி நான் எடுக்கும்படி நேரிட்டால் என்னை நீ திருத்திவிடும் அளவுக்கு நான் உனக்கு உரிமை கொடுக்கிறேன், பானு! சொல்லப் போனால் நானே உன்னை என் மனத்தோடு நேசித்து வருகிறேன். மாறுபட்ட கொள்கை காரணமாக நீ சம்மதம் தர மாட்டாய். உன் மனத்துக்கு வேதனை தரக் கூடாது என்பதற்காகவே நான் உன்னிடம் என் நேசத்தைக் கூறாமல் இருந்தேன்.'' மூர்த்தி நெஞ்சு தழுதழுக்கக் கூறினான்.

பானு மகிழ்ந்து போகிறாள். ''எனக்குப் புரிகிறது உங்கள் மனம். உங்களை என் கணவராக ஏற்பதை என் பாக்கியமாகவே நான் கருதுகிறேன். நீங்கள் தெய்வத்தை நம்பவில்லை என்று சொல்லிக் கொள்கிறீர்கள். ஆனால் நீங்கள் தெய்வத்தைப் புரிந்து கொண்டிருப்பவர் என்பதை நான் உணருகிறேன்......''

மூர்த்தி சிரிக்கிறான். ''பானு! இப்படிச் சொல்லிச் சொல்லி என்னை உன்னுடைய வழியில் மாற்ற முயற்சி செய்தால் அது பெரிய சாதனையாகும் !''

பானு பதில் கூறாமல் பதிலுக்குச் சிரிக்கிறாள்.

விவாகம் இனிதாக முடிந்தது. குல வழக்கப்படியேதான் நடந்தது.

சொர்ணத்துக்குப் பானு தன் மாட்டுப் பெண்ணாக வந்ததில் கொள்ளைக் குதூகலம். தெய்வ நம்பிக்கையில் ஆழ்ந்த பற்றுடைய பெண் மூர்த்தியை மணக்கத் தானாகவே முன் வந்ததில் வியப்பும் கொண்டாள்.

பானு கணவன் வீட்டில் படியேறும் நாள். மூர்த்தியின் வீடு கல்யாணக் கோலாகலமாக அமர்க்களப்படுகிறது. பானுவையும் அவள் வீட்டாரையும் சொர்ணம் உள்ளம் மகிழ வரவேற்றாள். விருந்தினர்கள் விருந்துண்ட களிப்போடு தங்கள் வீடு திரும்பினர். சாமிநாதனும் சங்கரியும் மட்டும் அன்

# கல்கி

## சந்தா விகிதம்

| | ஒரு வருஷம் ரூ. பை. | ஆறு மாதம் ரூ. பை. |
|---|---|---|
| இந்தியா | 20-00 | 10-00 |
| பர்மா, மலேயா இதர நாடுகள் | 40 00 | 20-00 |
| | இலங்கை நாணய மதிப்புப்படி | |
| இலங்கை | 21 00 | 10 50 |

சந்தா தொகை முன்னதாக அனுப்பப்பட வேண்டும். வி பி பி. கிடையாது

மானேஜர்:

கல்கி காரியாலயம் :: சென்னை-10

"லாபத்தை எதிர்பார்த்துச் செய்யும் தொழில்களில் விவசாயமே தலை சிறந்தது. உற்பத்தியைப் பலவகையில் பெருக்கவல்லது. ஆத்ம திருப்தியைக் கொடுப்பது. மேலும் சுதந்திர வாழ்விற்கு உகந்தது."

— சிசரோ



# தேவைக்கேற்ற சேவை!

இதுவே சரியானது. யாவரும் ஏற்றுக்கொள்ளக் கூடியது. கூட்டுறவுச் சங்கங்கள் விவசாயிகளுக்குத் தனிப்பட்ட முறையில் உதவும் நிறுவனங்கள். சென்னை மாநில கூட்டுறவு வங்கியானது மாவட்டங்களிலுள்ள மத்திய கூட்டுறவு வங்கிகள், இதர கூட்டுறவு நிறுவனங்கள் ஆகியவைகளின் மூலம் இம் மாநிலத்தின் விவசாய முன்னேற்றத்துக்காகச் சிறந்த பணியாற்றிவருகிறது. வேளாண்மை செழிக்கவும் அதன்காரணமாக இம்மாநில விவசாய நடவடிக்கைகள் சிறப்புற்று விளங்கவும் சென்னை மாநில கூட்டுறவு வங்கி, கண்ணுங் கருத்துமாய்ப் பாடுபட்டு வருகிறது. தான் புரியும் தொண்டு வெற்றி கண்டுள்ள காரணத்தால் இத்துறையில் ஏற்பட்டுவரும் நிறைவு குறித்து இந்த வங்கி பெருமகிழ்ச்சி கொள்ளுகிறது.



விவரங்களுக்கு உங்கள் அருகிலுள்ள கூட்டுறவு மத்திய வங்கியில் விசாரிக்கவும்

உழவரின் உற்ற நண்பன்

## சென்னை மாநில கூட்டுறவு வங்கி லிமிடெட்

271, அங்கப்ப நாய்க்கன் தெரு, சென்னை-1

ஆர். கனகசபை M.L.A
தலைவர்

டி. வர்த்தமானன்
செயலாளர்

MSCB-167

திரவு மூர்த்தியிடம் பானுவை ஒப்படைத்து விட்டுச் செல்லக் காத்திருந்தனர்.

**பி**ற்பகல் சாமிநாதன் அந்த ஊரில் கிடைக்காத சில பொருள்களை அடுத்த ஊரில் வாங்கி வரக் கிளம்பிய போது, மூர்த்தி அவரைத் தடுத்து, தானே வாங்கி வருவதாகச் சொல்லிக் காரில் கிளம்பி விட்டான்.

விளக்கு வைக்கும் நேரத்துக்கு முன்பே மூர்த்தி திரும்பி இருக்கலாமே...? இரவு மணி எட்டு, ஒன்பது என ஏறிக் கொண்டே போகிறது. சாமிநாதன் பண்ணையாள் ஒருவனைச் செய்தி தெரிந்து வர அனுப்பினார். அவனும் திரும்பி விட்டான். 'ஐந்து மணிக்கே எல்லாச் சாமான்களும் வாங்கிக் கொண்டு கிளம்பி விட்டாராமே, கடைக் காரர் சொல்லுகிறார்' என்றான் அவன்.

கடிகாரத்தில் சின்ன முள் இரண்டு எண்ணுக்கு வந்துவிட்டது. அனைவரும் திகிலுடன் அமர்ந்திருக்கின்றனர். பொழுது விடிந்ததும் மீண்டும் தேடும் முயற்சியில் ஈடுபட வேண்டும். 'கடவுளையே நம்பாதவனோடு சம்பந்தம் கொண்டால் கடவுள் கண்டிப்பாகத் தண்டிப்பார்' என்கிறார்கள் பக்கத்து வீட்டார்.

மூர்த்தி மூன்று மணிக்குக் களைத்துச் சளித்து வீடு திரும்பினான். மெத்தையோ தலையணையோ வாங்கின சாமான்களோ ஒன்றையுமே காரில் காணவில்லை.

''சாமான்களை வாங்கிக் கொண்டு திரும்பிய போது வழியில் ஒரு பெண் பிரசவ வலியால் துடித்துக் கொண்டிருந்தாள். அவளை ஆஸ்பத்திரிக்கு அழைத்துச் செல்ல வண்டி கிடைக்கவில்லையாம். அவள் நிலை பரிதாபமாக இருந்தது. அதனால் காரில் அழைத்துக் கொண்டு ஆஸ்பத்திரிக்குப் போனால் அங்கு 'பெட்' காலியில்லை. வண்டியிலிருந்ததை ஆஸ்பத்திரிக்குத் தானம் செய்து, அவளை நன்கு கவனிக்க ஏற்பாடு செய்தேன். 'இன்னும் சற்றுத் தாமதித்திருந்தால் அபாய நிலை எட்டியிருந்திருக்கும். இப்போதும் தகுந்த உதவி வேண்டியிருந்தாலும் வேண்டியிருக்கும்' என்றான் டாக்டர். அதனால் அங்கேயே இருந்தேன். மூன்று பெண் குழந்தைகளுக்குப் பிறகு இது பிள்ளைக் குழந்தை எனத் தகப்பனுக்குச் சந்தோஷம்.... இதோ பார், அந்தக் குடியானவன் கொடுத்த கல்கண்டு. என்னால் தான் அவன் ஒரு பிள்ளைக்குத் தகப்பனானும். டாக்டர் இனி அபாயம் இல்லை என்றதும் நான் புறப்பட்டு வந்து விட்டேன்'' என மகிழ்ச்சியுடன் நிகழ்ச்சிக் கோர்வை வருகை தருகிறது.

''நல்ல அழகுதான் போ! இங்கு மங்கள நிகழ்ச்சி காத்துக் கொண்டு நிற்கிறது. அங்கே நீ பிரசவ கேசுக்கு உதவினுயாக்கும்!'' மற்றவர்கள் தூற்றும்போது சாமிநாதனும் பானுவும் மட்டும் வாய் திறந்து பேசவில்லை.

சற்று நேரம் பொறுத்துச் சாமிநாதன் மெல்லக் கூறினார். ''மூர்த்தி! இன்று நடந்தது தெய்வக் கட்டளை....''

மூர்த்தி சிரித்துவிட்டுப் பேசாமல் இருந்தான். 'நான் தெய்வத்தை நம்பாதவன்' எனக் கூறி அவருடைய மனத்தைப் புண்படுத்துவானேன்?

''நான் குறித்து வைத்த முகூர்த்தம் தவறிவிட்டது. அதனால்....'' சாமிநாதன் சொல்ல முடியாமல் தவிக்கிறார்.

''எனக்குப் புரிகிறது. நான் நட்சத்திரம் யோகம் இதெல்லாம் நான் நம்பாவிட்டாலும் உங்கள் சொல்லுக்கு மதிப்புத் தருகிறேன். நீங்கள் அனுமதி தரும் வரை, பானுவை ஏற்க நான் காத்திருப்பேன்'' என்கிறான் மூர்த்தி.

சாமிநாதன் அவ்விடத்தை விட்டு அகன்ற பிறகு மூர்த்தி பானுவிடம் சொன்னான்: ''பானு! உனக்கு ஏமாற்றமாக இருந்திருக்கும். ஆனால் இது இக்கட்டான நிலை. நம்முடைய மகிழ்ச்சிக்காக நாம் காத்திருக்க முடியும். ஆனால் அப்பெண்ணின் அபாய நிலை காத்திருக்க முடியாதே! நான்கு குழந்தைகளின் தாயை மரணத்தின் பிடியிலிருந்து மீட்க வேண்டியதையே நான் முதலாவதாகக் கருதினேன்.''

''எனக்குப் புரிகிறது. உங்களை நான் நன்றாக அறிந்து கொள்கிறேன். நீங்கள் என் தெய்வம்!''

மூர்த்தி 'தெய்வம்' என்ற சொல்லுக்காகச் சிரித்துவிட்டு நகருகிறான்.

சாமிநாதன் அனுமதி தந்த நாளில்தான் மூர்த்தி பானுவைத் தனக்குச் சொந்தமாக்கிக் கொண்டான்.



## மிதக்கும் கற்கள்!

புதைபொருள் ஆராய்ச்சியாளர் ஜோடே, தலோங் கிராமத்தில் என்ன செய்தார்? புதைபொருள் ஆராய்ச்சியில்தான் ஈடுபட்டிருந்தார்! ஸாதவாஹன அரச பரம்பரையினர் இப்பிரதேசத்தை ஆண்டு வந்தனர் என்பதற்கான செப்பேடுகள் அவருக்குக் கிடைத்தன. அது மட்டுமா? அவ்வரசர்கள் காலத்தில் கோயில்கள் கட்டப் பயன்பட்ட கற்களும் அகப்பட்டன. இந்தக் கற்களைக் கழுவிப் பார்க்க நீரில் போட்டார் ஜோடே. என்ன ஆச்சரியம்! அவை நீரில் மிதந்தன!

மேலும் ஆராய்ந்தபோது இந்தச் 'செங்கற்'கள் சோள மாவும் குதிரைச் சாணமும் குறிப்பிட்ட அளவில் கலந்து உருவாக்கப் பட்டவை எனத் தெரிய வந்தது. ஒரு பெரிய கோவிலைக் கட்டி முடிக்க இதுபோன்ற செங்கற்கள் ஏராளமாகத் தேவைப்பட்டிருக்குமே! இதிலிருந்து ஸாதவாஹன அரசர்களின் குதிரைப் படை எவ்வளவு பெரிதாக இருந்திருக்கும் என்றும் தானிய லக்ஷ்மியின் கருணை கடாட்சத்தை இப் பூமி எந்த அளவுக்குப் பெற்றிருந்திருக்கும் என்றும் ஊகித்து உணரலாம் என்கிறார் ஆராய்ச்சியாளர் ஜோடே. நமக்கும் வியப்பாகத்தானே இருக்கிறது!

— வி. எஸ். ஸங்கடன்கர்

இல்லறம் அமைதியாகவும் ஆனந்தமாகவும் நகருகிறது. மாதங்கள் ஏறும்போது சொர்ணத்துக்கு மட்டும் மருமகளிடம் ஏமாற்றம். பிரார்த்தனை என்று கோவில் கோவிலாக நுழையும் இந்தப் பெண் மூர்த்தியையும் அழைத்துச் சென்று அவனைத் தெய்வ வழிபாட்டுக்குத் திருப்பாமல் இருக்கிறாளே! கடைசியில் அவளின் வழிக்கு இவன் திரும்பி விடுவானோ!

செல்ல மகனுக்கு மூர்த்தியும் பானுவும் பெற்றோர்களாகி விட்டார்கள். குழந்தை ரகுவுக்குக் கடவுள் வணக்கம் சொல்லித் தருகிறாள் பானு. எட்டு மாதத்திலேயே தளர் நடை போட ஆரம்பித்து விட்ட செல்வன் கடவுள் படத்தைப் பார்க்கும்போதெல்லாம் கரம் குவிக்கிறான்.

ரகுவின் பிறந்த நாள் வைபவத்துக்குக் கோலாகலமான ஏற்பாடு நடக்கிறது. வீட்டைச் சுற்றித் தெருவையும் அடைத்துப் பந்தல். நான்கு நாட்களுக்கு முன்பே பட்சணங்களும் பணியாரங்களும் தயாராகி விட்டன. அறிந்தவர் தெரிந்தவர்களுக்கு அழைப்புக் கடிதங்கள் சென்றுவிட்டன. மூர்த்தியே ஆசைப்பட்டு அவ்வளவும் செய்திருந்தான்.

முதல் நாள் பகல் பொழுதில் மப்பும் மந்தாரமுமாகப் பிசுபிசுத்துக் கொண்டிருந்த மழை மெள்ள மெள்ள அதிகமாகி இரவு புயலாகவும் பேய் மழையாகவும் மாறிச் சீறிச் சீறிப் பாய்ந்தது. குடியானவர்களின் குடிசைகள் நீரில் அடித்துப் போயின. கூச்சலும் கூக்குரலும் விண்ணைப் பிளக்கின்றன.

பிறந்த நாள் விழாப் பந்தலுக்குக் குடியானவர்களை மூர்த்தி இழுத்து வருகிறான். விழாவுக்கான பண்டங்கள் அவர்கள் சாப்பாட்டுக்கு உதவுகிறது. பிறந்த நாள் வைபவம் அன்னதான வைபவமாக மாறிவிட்டது. புயல் காரணமாக அழைக்கப்பட்டவர்கள் வரவில்லை. குழந்தைக்கான விழா நடைபெறவில்லை.

சொர்ணத்துக்கு மிகவும் மன வேதனையாக இருந்தது. மூர்த்தியோ பானுவோ பிறந்த நாள் விழாவைப் பற்றி நினைத்ததாகக் கூடக் காணவில்லை. சாமிநாதனும்கூட இதெல்லாம் தெய்வச் செயல் எனக் கூறிவிட்டு மௌனமாகிவிட்டார்.

புயல் ஓய்ந்து மூர்த்திக்கும் சாமிநாதனுக்கும்கூட விவசாயக் கணக்கில் நஷ்டத்தைக் காட்டிவிட்டது. ஆனால் நஷ்டக் கணக்கு விசாரணைக்கும் மேற்பார்வைக்கும் அப்பக்கம் வந்த கலெக்டர், மந்திரிகளிடம் மக்கள் மூர்த்தி செய்த உதவியை நன்றியுடன் எடுத்துரைத்தபோது, அவர்கள் அவனைப் பாராட்டினர். அவன் பெயர் செய்தித் தாள்களில் பிரபலமாக வந்தது.

மாதங்கள் மேலேறின.

அடுத்த ஊர் சந்தைக்கு மூர்த்தி நடந்தே போயிருந்தான். சாமான்களுடன் அவன் திரும்பி வருவதற்குப் பதில் ஓர் ஆள்தான் ஓடி வந்தான்.

''அம்மா! அம்மா! நம்ப ஐயாவை மாடு முட்டித் தள்ளிடுச்சு. ஆஸ்பத்திரியிலே இருக்காங்கம்மா. ஓடியாங்க!''

சொர்ணமும் பானுவும் பதைபதைத்து வாசலுக்கு ஓடி வந்தனர். ''என்னடா? மாடா முட்டிவிட்டது?''

வந்தவன் முழு விவரம் தெரிவிக்கிறான். சந்தைக்கு வந்திருந்த யாரோ ஒருவரைத் தான் அந்த மாடு குறியாக முட்ட வந்ததாம். அந்தப் பக்கம் சென்று கொண்டிருந்த மூர்த்தி அதைப் பார்த்ததும் ஓடிச் சென்று அவரைக் காப்பாற்றியிருக்கிறான். மாடு கோபத்தோடு அவனை முட்டித் தள்ளி விட்டது. உடனே கூடியிருந்தோர் மாட்டை அடக்கி மூர்த்தியைக் காப்பாற்றி ஆஸ்பத்திரியில் சேர்த்து விட்டார்கள்.

சாமிநாதனுக்குச் செய்தி அனுப்பிவிட்டுச் சொர்ணமும் பானுவும் ஆஸ்பத்திரிக்கு ஓடினர். மூர்த்திக்கு நினைவு இருக்கிறது. வயிற்றின் அடிப்பாகம் மாட்டின் கொம்பினால் கொஞ்சம் கிழிக்கப்பட்டிருந்தாலும் குடலைத் தொடாமலே நின்று விட்டது. அபாயம் இல்லையென டாக்டர் கூறியதைக் கேட்டதும் சொர்ணமும் பானுவும் ஆண்டவனுக்குக் கரம் குவித்து நன்றி செலுத்தினர். கிழிந்த பாகத்தைத் தையல் போட்டு மூடிவிட டாக்டர்கள் ஈடுபட்டனர்.

நாட்கள் ஏறின. அன்றுதான் மூர்த்தி ஆஸ்பத்திரியிலிருந்து வீட்டுக்குத் திரும்பி வந்தான். மேலும் சில நாட்கள் அவன் படுக்கையிலேயே இருக்க வேண்டும், நடமாடக் கூடாது என்பது டாக்டரின் கட்டளை.

மூர்த்தி தன் அறையில் படுத்திருக்கிறான். மல்லிகையின் மணமும் ரோஜாவின் மணமும் அறை முழுவதும் பரவியிருக்கிறது. அது வீட்டைச் சுற்றியுள்ள தோட்டத்திலிருந்துதான் வந்திருக்க வேண்டும். வயலிலேயே பெரும் பொழுதைக் கழித்துவிடும் போது தோட்டத்தைக் கவனிக்கக்கூட நேரம் இருக்காது. அந்தப் பொறுப்பைப் பானுதான் ஏற்றுக் கொண்டாள். ஒருகால் தெய்வம், தெய்வம் என்கிறாளே, அந்தத் தெய்வத்துக்குச் சூட்ட மல்லிகை, ரோஜா பயிரிட்டிருப்பாளோ? அந்த அறையில் அப்பூக்கள் இல்லாமலே மணம் மட்டும் இதயத்தைத் தொடுமளவுக்கு ஆழமாகப் பரவியிருக்கிறதே!

இப்படி மூர்த்தி யோசனையில் ஈடுபட்டிருந்தபோது பானு அறையில் நுழைந்தாள்.

''பானு, இந்த அறையில் மல்லிகை, ரோஜாவின் மணம் மகிழ்ச்சி தரும் அளவுக்கு வீசுகிறது. மலர் மட்டும் கண்களில் படவில்லை. தோட்டப் பயிரா?'' என்று மூர்த்தி கேட்கிறான்.

பானு மெள்ளப் புன்னகை புரிந்துவிட்டுக் கூறுகிறாள்: ''இது தெய்வ மணம்!''

மூர்த்தியும் சிரிக்கிறான். ''பானு, தெய்வ போதனை ஆரம்பிக்கும் முயற்சியா? நான் என்ன செய்யட்டும்? காணாத தெய்வத்தை என்னால் நம்ப முடியவில்லை.''

''அப்படியானால் இங்கு கமழும் பூமணத்தையும் நீங்கள் நம்பக் கூடாது. ஏனெனில் ரோஜா, மல்லிகை மலர்களை நீங்கள் காணவில்லை. மணம் மட்டும் தந்து கொண்டு அவை எங்கோ தோட்டத்தில் ஒளிந்து கொண்டிருக்கின்றன.''

# டாடாவிஷன்



டாடாவின் பெருநோக்கு. தீர்க்க தரிசனமுள்ள கருத்துக்கள் இருந்து என்ன? அவை மக்களிடையே பரவாவிட்டால் என்ன பயன்?— அவை மக்களைத் தழுதழு என்று செயல்படுத்த வேண்டாமா?

ஜாம்ஷெட்பூரில் நல்ல கருத்துக்கள் செயலாகாமல் வீணாவதில்லை. ஏற்ற உதவிகளும் சூழ்நிலையும் அங்கே உள்ளன. இத்தகைய ஒன்றே குடும்ப நலத்திட்டம்.

இந்தத் திட்டம் ஜாம்ஷெட்பூரில் தொடங்கிய மூன்று ஆண்டுகளுக்குள் 'விவாத-வட்டங்களில்' கலந்து கொள்வோர் தொகை பத்து மடங்காக உயர்ந்து விட்டது. விவாதத்தின் விளைவாக எழுந்த தெளிவான உறுதி: 1965-இல் ஜாம்ஷெட்பூரில் பிறப்புவிகிதம் குறையத் தொடங்கி விட்டது.

**டாடா எஃகு ஸ்தாபனத்தின் குடும்ப நலத் திட்டத்தினால் ஜாம்ஷெட்பூர் மக்களுக்கு என்ன பயன்?**

இரண்டு நவீன நகரத்துக் குடும்பத் திட்ட நிலையங்களும் ஆறு பிரசவ, குழந்தை பராமரிப்பு வி[illegible]களும் இனாமாகக் குடும்பக் கட்டுப்பாட்டு சாதனங்களை வழங்குகின்றன; ஆலோசனை கூறுகின்றன.

இரண்டு நகர நிலையங்களிலும் டாடா மெயின் ஆஸ்பத்திரியிலும் 'வாஸக்டமி' ஆபரேஷன் செய்யப்படுகிறது. அதைச் செய்து கொள்ளும் கம்பெனி ஊழியருக்கு ஆபரேஷன் செலவு இல்லை, அதோடு ரொக்கப் பரிசாக ரூ. 200/- தரப்படுகிறது. போனவருஷம் ஆகஸ்டு டிசம்பர் காலத்தில் 1650 பேர் ஆபரேஷன் செய்து கொண்டதில் வியப்பில்லை. கம்பெனி ஊழியரின் மனைவியர் 'டியூபெக்டமி' ஆபரேஷன் செய்து கொண்டாலோ, 'லூப்' பொருத்திக் கொண்டாலோ ஊக்கப்படுத்தும் வகையில் ரொக்கம் வழங்கப்படுகிறது.

**டாடா ஸ்டீல்**

மூர்த்திக்குச் சட்டென்று இந்தச் சொற்கள் அவன் மனத்தைத் தட்டித் திறக்கக் கூவுவது போல் உணர்ச்சி ஏற்படுகிறது. எவ்வளவு ஆழமாக, ஆனால் சற்றும் வேதனை தராமல் அவை அவனை எழுப்புகின்றன!

''பானு... பா...னு...'' அவனால் அந்த மெல்லிய விழிப்பில் கூடப் பேச முடியாது போலிருக்கிறது.

''தயவு செய்து ஒரு கேள்விக்குப் பதில் கூறுங்கள். நம்மிடையே நாம் மகாத்மா காந்தியைப் போற்றுகிறோம். ஆனால் நமக்குப் பிறகு வரும் சந்ததியார், காந்திஜியை நம்பக்கூடாது, வணங்கக் கூடாது என்பது பற்றி உங்கள் எண்ணத்தைக் கூறுங்கள்.''

''காந்திஜியை எப்படி மறக்க முடியும், பானு? சரித்திர ஏடுகளில் படிந்துள்ள அவரது ஒவ்வொரு நல்ல செயலும் அஹிம்ஸை சத்தியத்தை அவர் கடைப்பிடித்த வரலாறுமே காந்திஜிக்கு உருவம் கொடுத்து வணங்க வைக்குமே!''

''அப்படியானால் தெய்வத்தை நீங்கள் கண்டிப்பாகப் பார்க்க முடியும். அன்பு, நேசம், சுக துக்கங்களைச் சமமாகப் பாவிப்பது, சத்ருவை மன்னிப்பது, பிறர் மனம் நோகச் செய்யாமல் இருப்பது. இத்தனைக்கும் கை, கால், முகம் என உருவம் கொடுங்களேன், நீங்கள் கடவுளைக் காண்கிறீர்கள். நம்முடைய முகத்தை நாமே பார்த்துக் கொள்ள முடியாதது போல், இத்தனை குணங்களையும் ஏற்று, உங்களையே நீங்கள் தெய்வமாக்கிக் கொண்டுவிட்டபோது, தெய்வத்தைத் தேட நீங்கள் முயற்சி எடுத்துக் கொள்ளவில்லை... தயவுசெய்து, தெய்வச் சிலைக்கு மாமிசத்தையும், கொழுப்பையும் நிரப்பாமல், இந்தக் குணங்களால் நிரப்பிப் பாருங்கள். நீங்கள் தெய்வத்தைப் பார்க்கிறீர்கள்....''

''புரிகிறது.... பானு....''

''கடவுள் மணம் நிறைந்த மலர். அழகும் மணமும் நிரம்பி யிருக்கிறது. பக்தர்கள் என்று தங்களைக் கூறிக் கொள்ளுபவர்கள் மலரின் அழகை மட்டும் பார்த்துக் கொண்டு, முக்கியமான மணத்தை மறந்து, காகிதப் பூவை நேசிப்பதாக இருக்கின்றனர். சிலர், மலர், மணம் இரண்டையும் காண்பார்கள். அதனால்தான் தெய்வத்தைக் கண்டு தெய்வமாகவும் இருக்க முடிகிறது. தெய்வீகக் குணங்களான மணத்தை மட்டும் நுகரத் தெரிந்து கொண்டுவிட்ட நீங்கள் மலரான தெய்வத்தைக் கண்டிப்பாகக் காண முடியும்'' எனக் கூறிக் கொண்டே வந்த பானு மெள்ள மூர்த்தியின் கைகளை எடுத்துத் தன் கண்களில் ஒத்திக் கொண்டாள்.

''நீங்கள் என் தெய்வம். உங்களிடம் தெய்வ மணம் இருப்பதினாலேயே நான் உங்களை என் மணாளனாகத் தேர்ந்தெடுத்தேன். எவனொருவன், சுக துக்கத்தையும், நண்பன் விரோதியையும், விருப்பு, வெறுப்புக்களையும் மற்றும் இது போன்ற ஒன்றுக்கொன்று விரோதமான குணங்களையும் சமமாகப் பாவித்துக் காமக் குரோதங்களை அடக்கி விட்டவனாகிறானோ, அவனே என்னை அடைந்து, என்னில் ஐக்கியமாகிறான் என்பது கீதையின் வாக்கு. அதனால்தான் நான் உங்களையே தெய்வமாகக் காண முடிகிறது....தெய்வமாக நிற்கும் நீங்கள் உங்களை அறியாமலே தெய்வத்தைக் கண்டுகொண்டுதான் இருக்கிறீர்கள் என்பதை நான் அறிகிறேன்.''

மூர்த்திக்கு மயிர்ச் சிலிர்ப்பு ஏற்படுகிறது. ஆனந்தானுபவம்.... ஆண்டவனைக் கண்டு விட்ட பரவசம்...அவன் மெள்ளப் பானுவை அணைத்துக் கொள்கிறான்.

எவராலும்
நெருங்கமுடியாத
முதலிடம்




★ கச்சிதமான நயம்
★ ஒப்பற்ற சுவை
★ முரமுரப்பான புதுமை
★ ஈடிணையற்ற போஷாக்கு




க்ளுகோ
பிஸ்கட்டுகள்




பார்லே க்ளுகோ இந்தியாவிலேயே உன்னத
விற்பனையுள்ள பிஸ்கட்டாக விளங்குவதில் வியப்பில்லை!

everest/340 dr 1/PP TM

அமெரிக்காவில் மனச்சாட்சி நிதி என்று ஒன்று இருக்கிறது. ரயிலில் டிக்கட் வாங்காமல் சென்றவர்கள், வருமான வரி ஏமாற்றியவர்கள், கடிதங்களுக்கு ஸ்டாம்ப் சரியாக ஒட்டாதவர்கள் பிறகு மனம் திருந்தினால் தங்கள் பெயரை வெளியிடாமல் பணத்தை இந்த நிதிக்கு அனுப்பி வைக்கலாம். இது தர்ம காரியங்களுக்கும் பயன் படுத்தப்படும்.

ஆதாரம்: "காரனெட்
தகவல்: "பாபு"

## மரத்தால் ஆன கடிகாரம்



ருஷ்யாவில் மரத்தினாலேயே செய்யப்பட்ட கடிகாரம் ஒன்று உள்ளது. பொம்மை கடிகாரம் அல்ல, ஓடும் கடிகாரம். இக் கடிகாரத்தினுள் எல்லாப் பாகங்களும் மரத்தினால் ஆனவை!

'மெயின் ஸ்பிரிங்' நுண்ணிய மூங்கிலால் ஆனது!

ஆதாரம்: சோவியத் யூனியன்
தகவல்: ச. ஸ்ரீதரன்

## இப்படியொரு டாக்டர்!

எழுத்தாளர் ஒருவருக்கு மனஅமைதி கிட்டாததால் எழுத்தில் நாட்டம் செல்லவில்லை. அமைதி குலையக் காரணம், வீட்டில் உள்ளோரும், வெளியிலிருந்து அவரைப் பார்க்க வருவோரும் அவருக்கு அடிக்கடி தொந்தரவு கொடுத்துக் கொண்டிருந்ததுதான். அவருக்கு ஒரு யோசனை தோன்றியது. தம் அறை வாசலில் ஒரு 'போர்டை'த் தொங்க விட்டார்.



அதில் "ஒரு நோயாளிக்கு சத்திர சிகிச்சை செய்யும்போது டாக்டருக்கு நீங்கள் தொந்தரவு கொடுத்து இடையூறு செய்வீர்களா? நான் எழுத்துலகில் ஒரு டாக்டர்!" என்று எழுதினார். இதன் பிறகு அவரைத் தொந்தரவு செய்வார் யாருமில்லை.

- டி. எஸ். சௌந்தரராஜன்

## தலைவரின் பதில்

பத்து படத் தயாரிப்பாளர்களிடம் அட்வான்ஸ் வாங்கிக் கொண்டு, யாரிடமும் சொல்லாமல் தம் கணவருடன் அமெரிக்காவுக்குப் பறந்து விட்டார் நடிகை ராஜஸ்ரீ. படத் தயாரிப்பாளர்கள் அவர்களுடைய சங்கத் தலைவரிடம் சென்று முறையிட்டபோது அவர், "வழக்குத் தொடருங்கள்" என்று சொன்னார்.

அந்தத் தலைவர் யார், தெரியுமா? சாந்தாராம் — ராஜஸ்ரீயின் தந்தை.

ஆதாரம்: "காரவான்"
தகவல்: 'பாபு'

## செய்தி!

அன்று எங்கு பார்த்தாலும் குடிசைகள் தீப்பற்றி எரிந்து கொண்டிருந்தன. அதை சினிமாப் படம் பிடித்தார் ஒரு பிரஞ்சுக்காரர். அது ஒரு செய்தியாகப் படமே. அதிலிருந்து செய்திப் படம் தோன்றியது. முதல் செய்திப் படம் தயாரித்தவரும் இந்தப் பிரெஞ்சுக்காரர்தான். 1927ல் பேசும் செய்திப் படம் முதன் முதலாகத் தோன்றியது.

-- பி.வி. கிரி



வந்தவர்: என்ன ஜோதிடரே! வெண் கொற்றக் குடையின் கீழ் நின்று உலகை யெல்லாம் ஆள்வான். இவன் கையசைப்பை எதிர்பார்த்து அரசர்களும் அமைச்சர்களும் காத்திருப்பார்களென்று ஜோசியம் சொன்னீங்களே! இப்ப இவன் எஸ். எஸ். எல். ஸி.யே பெயிலாயிட்டானே!

ஜோதிடர்: அதனாலென்ன? டிராபிக் கான்ஸ்டபிள் வேலையில் கொண்டு போய்ச் சேர்த்துடுங்க. ஜோதிடம் பலிச்சுட்டுப் போகுது!

-கு. க. ர.

அருகிலோ, தொலைவிலோ உள்ள எந்த நிலையத்தையும் கணீரென்று தெளிவாக இணைக்கிறது

# புதிய பிலிப்ஸ் வைகிங்-1



ரூ. 245/-†க்கு
மட்டுமே கிட்டுகிறது
இந்த மகத்தான
மதிப்பு

**பலவீனமான நிலையங்களையும் நன்கு எடுப்பதற்கென்றே புரட்சிகரமான AVC* அமைப்புடைய பாரதத்தின் ஒரே 2.பாண்டு டிரான்ஸிஸ்டர் இது— எளிதில் எடுத்துச் செல்லும்படி இலேசு; ஆனால் உறுதியானது.**

ஆடொமேடிக் வால்யூம் கன்ட்ரோல் சிற்றலை நிலையங்கள் எடுபடாமல் மங்குவதைத் தடுக்கிறது. அருகிலுள்ள வலிமையான நிலையங்களை நன்கு கேட்கவைக்கிறது.
500 எம். டபிள்யூ அவுட்புட் 10 செ.மீ ஸ்பீக்கர், 2 உட்பொருத்தப்பட்ட ஏரியல்கள் (எளிதில் கையாளுவதற்கான டெலிஸ்கோபிக் ஏரியல் இல்லை) விரிவான சிற்றலை எடுப்பு (16 மீட்டர்கள் உட்பட), கையடக்கமான இழுத்துத் திறக்கக்கூடிய பாட்டரி அறை.

இவை யாவையும் தவிர புகழ் பெற்ற பிலிப்ஸ் விற்பனைக்குப்பிந்திய சேவையும் உண்டு!

உங்கள் பிலிப்ஸ் வியாபாரியிடம் இப்புதிய பிலிப்ஸ் வைகிங் மற்றும் இதர பிலிப்ஸ் ஸோனோரமிக் தயாரிப்புகளைக் காணுங்கள்.

†எக்ஸைஸ் தீர்வை உள்ளிட்டது. இதர வரிகள் தனி

பாட்டரிகள் எங்கும் கிடைக்கின்றன

பிலிப்ஸ் ஸோனோரமிக் ரேடியோ
மேன்மையான பெயர்!
மேன்மையான ஒலி

**PHILIPS** 

பிலிப்ஸ் இந்தியா லிமிடெட்

CHPR-9-133 TAM

# அழகின் பெயர் சத்தியம்

க. பஞ்சாபகேசன்

பாதை ஓரத்தில் ஆள் உயரமே வளர்ந்திருந்த சில தென்னை மரங்கள் —

இந்தக் குட்டையான தென்னை மரங்களில் தான் குலை குலையாக எத்தனை காய்கள்! இத்தனை குலைகளைப் பெற்றெடுத்தும் அந்தத் தென்னைகளின் இளமை அழகு குறையவில்லை. ஆள் உயரமே வளர்ந்து, அந்தப் பக்கத்துச் செழுமைக்கு அணிகலனாய், எத்தனை அழகாக — வரிசையாக நின்று கொண்டிருந்தன!

தென்னை மரங்களின் சல்லி வேர்கள் பூமியின் மேல் மண்ணில் பதிந்தும் பதியாமல் ஆரம் ஒயிலாக ஓடிக் கொண்டிருந்தன, பாதையின் இறக்கத்தில். அந்த இடத்தில்தான் வாடாமல்லிகையும் சிவப்புச் சாமந்தியுமாகப் பரவலாகப் படர்ந்திருந்தன.

கூப்பிடு தூரத்தில் ஓடையின் சலசலப்புச் சத்தம் கேட்டுக் கொண்டிருக்கிறது, அந்த அமைதியான சூழ்நிலையில்.

யாருக்கோ சொந்தமான தனி இடம் போலத்தான் தெரிந்தது. பிரதான வீதியை விட்டுப் பிரிந்து உள்ளடக்கமாக வந்திருந்தது அந்தச் சிறு பாதை. அப்பாதையின் இரு மருங்கும்தான் இந்தச் சின்ன ஆள் உயரத் தென்னை மரங்களும் மலர்க் கடலும்.

மேலே சூரியன் தகித்துக் கொண்டிருந்தான். இரண்டு நாட்கள் மழை அடித்து விட்டுக் காயும் வெய்யில் ஒளியில் இதம் இருக்கவில்லை.

பிரதான வீதியில் நடந்து கொண்டிருந்த அந்த யாத்திரீகன், இப்படியோர் இதமான நிழல் இடத்தைக் கண்டதும், இச்சிறு பாதையில் நடந்து வந்து 'உஸ்' என்று பெருமூச்சு விட்டுக் கொண்டு, ஓர் ஆளுயரத் தென்னை மரத்தடியில் உட்கார்ந்தான்.

கட்டியிருந்த சலவை வேஷ்டியும் சட்டையும் அழுக்காகிவிடுமே என்று அவன் கவலைப் பட்டால்தானே? சட்டைப் பையிலிருந்து கைக்குட்டையை எடுத்து நெற்றியையும் அதன்மேல் சுருண்டு புரளும் குழல் கிராப்பையும் ஒற்றிக் கொண்டான் அவன்.

கையுடன் கொண்டு வந்திருந்த இரண்டு புத்தகங்கள், நோட்டுகள் ஆகியவற்றைச் சற்று எட்ட வைத்தான். உட்கார்ந்தபடியே மேலே அண்ணாந்து பார்த்தான்.

ரொம்பத் தூரத்தில் இல்லை; தேங்காய்கள் அவன் கைகள் பறிக்குமளவு தூரத்தில்தான் இருந்தன.

'தாளுண்ட நீரைத் தலையாலே தான் தர' இளமையிலே முதுமை அடைந்து விட்டதாகவா தெரிந்தன அந்த மரங்கள்? இல்லை, 'இளமை நிரந்தரமானது; அது அழகானது; சத்தியமானது' என்று சொல்லுவன போலல்லவா நின்று கொண்டிருந்தன அவை?

தென்னம் பாளையில் பச்சைக் கிளி ஒன்று பட்டுச்சிமிழ் போல் உட்கார்ந்து கொண்டு தன் அழகு இறக்கைகளைப் 'படபட'வென்று அடித்துக் கொண்டது; தன் மூக்கை இறகுகளில் கோதிக் கொண்டு 'கீச் கீச்' என்று கத்தியது. கை நீட்டினால் அந்த அழகுக் கிளிகளைப் பிடித்து விடலாம்தான்!

அழகு!

இதே ஊரில் சில ஆண்டுகளுக்கு முன்னால்? அந்த யாத்திரிக இளைஞனின் மனம் சற்றே பின்னோக்கி நினைவு அலைகளைச் சரிபார்க்கத் தொடங்கியது.

ஊருக்குச் சில யாத்திரிகர்கள் வந்திருந்தார்கள். அதிலும் வெளி நாட்டு யாத்திரிகர்கள் அவர்கள்.

ஊரை அழகுபடுத்திக் கொண்டிருந்தது பெரிய கோயில். கோயிலிலுள்ள சிற்ப விசித்திரங்களைக் கண்டு மெய்மறந்து நின்று கொண்டிருந்தார்கள் அந்த வெளி நாட்டார்கள்.

தெய்வக் கலை அம்சம் ததும்பும் சிற்பங்களைப் பார்த்துப் பிரமித்து நின்றுகொண்டிருந்த அவர்களைப் பார்த்து அதிசயமாக நின்று கொண்டிருந்தார்கள் அங்கே கூடிய உள்ளூர்வாசிகள் சிலர். அங்கே இன்னொரு பகுதியில்—

ஒரு மேனாட்டு வாலிபன். தன்னுடன் வந்திருந்த ஓர் அழகான மேல் நாட்டு யுவதியை, ஓர் அற்புதமான கோயில் சிற்பத்துக்கு அருகில் நிற்க வைத்துப் படம் பிடித்துக்கொண்டிருந்தான்.

அந்தச் சிற்பம், அழகுத் தேவதை ஒருத்தியின் சிற்பம். அழகு, சிற்பத்தில் ஒவ்வோர் அங்கத்திலும் ஒளி விட்டது. அதன் அருகே அந்த அயல் நாட்டுப் பெண்மணி நின்றாள். அங்க அழகில் இவளும் குறைந்தவளல்ல.

உல்லாச யாத்திரைக்கு வந்த வாலிபன், பொருத்தமான சந்தர்ப்பப் பின்னணியில் புகைப்படம் எடுத்து முடித்தான்.

'கிளிக்'

''ஓகே, தாங்க்ஸ்!''

வெண் பற்கள் தெரிய மந்தகாசமாகச் சிரித்துக் கொண்டு, அவன் அருகில் ஓடி வந்து அவனுடைய கரங்களைப் பற்றியபடி மேலே நடந்தாள் அந்தப் பெண்மணி.

“மனம் விட்டுப் பழகுகிறார்கள்.''

''ஒருவரை யொருவர் திருமணம் கூடச் செய்து கொண்டிருக்க மாட்டார்கள். எத்தனை தூய விடுதலை மனப்பான்மை!''

''எல்லாவற்றுக்கும் மனச் சுத்தம்தானே காரணம்?''

சுற்றியிருந்தவர்கள் இப்படிப் பேசிக் கொண்டனர். மற்றவர் இதயங்களைப் படம் பிடிக்க முயல்வது எப்போதும் மனித சுபாவம்தானே?

உல்லாச யாத்திரிகர்கள் புறப்பட்டுச் சென்று விட்டார்கள். ஊர்க் கோயிலில் இப்போது கலகலப்பில்லை. வெளிப் பிராகாரத்தில் திறந்த வெளியே கூரையாக இருக்க, செதுக்கப்பட்டு வைத்திருந்த அந்த ரதிச்

சிற்பத்தின் மேல் இரண்டு நாட்கள் நல்ல மழை அடித்து. மேலும் இரண்டு நாட்கள் நல்ல வெயில் காய்ந்து இப்போது முன்னை விடவும் அழகாக — துல்லியமான இளமை யோடு—ஒளிவிட்டுக் கொண்டிருந்தது.

எப்போதோ அதைச் செதுக்கி வைத்துப் போயிருக்கிறான் ஒரு சிற்பி. சாமுத்திரிகா இலட்சணம் மிகவும் தெரிந்தவன் போலிருக் கிறது. அக்கலைஞனுடைய உள்ளமே ஓர் அழகுச் சுமையாக இருந்திருக்கவேண் டும். அந்த அழகின் சிந்தனைகளும் கற் பனைகளும் அவன் கைகளின் மூலம் நிரந்தரமாகி இச் சிற்பமாக — ரதிச் சிற்பம் —அமைந்து விட்டிருக்கிறது.



ஒரு நாள் பட்டப் பகல் நேரம்.

கோயிலின் வெளி இரும்புக் கிராதிக் கதவை இழுத்து மூட முடியாது. அந்த இரும்பு, தரை மண்ணிலே புதைந்து நிரந்தரமாக அந்த மண்ணோடு உறவாடிக் கொண்டிருந் தது. அதாவது — கோயில், இரவு பகல் எந்த நேரமும் திறந்திருக்கும்.

சில நாட்களில் பகல் நேரங்களில் ஒரு 'பேர்வழி' அங்கே வந்து போவதுண்டு. இரு கூடை நிறைய மலர்களை ஏந்திக் கொண்டு உள்ளே போவாள் அவள். ரதி தேவதையை ஒட்டியுள்ள பழைய மண்ட பத்தில் அமர்ந்தபடி பூத் தொடுப்பாள். நந்தியாவட்டை, வாடாமல்லிகை, வண்ண வண்ணச் சாமந்திப் பூக்கள், இருவாட்சி, ரோஜா, கதிர்ப் பச்சை... இப்படி மலர்கள் அக்கூடைகளில் எத்தனையோ இருந்து அவ ளது அழகிய கரத்தின் சுழற்சியில் சுழன்று, மாலைகளாக உருப்பெற்றுக் கொண்டிருந்தன.

அவள் தொழில் பூமாலைகள் தொடுத்து விற்பதுதானுனாலும், அவளும் ஓர் அழகுப் பூ மாதிரி...

முந்தைய நாள் மாலையிலோ, அல்லது அந்தந்த நாள் காலையிலோ பூக்கும் பூக்கள்

யாவும் அவள் கையால் தொடுக்கப்பட்டுச் சரங்களாகும்போது அப்போதுதான் நண்பகலில் பூத்த புது மலர்கள் மாதிரி ஒளிரும்.

தொடுத்த மாலைகளில் ஒன்றை எடுத்து அந்த ரதிச் சிலைக்குப் போடுவாள் அவள். சிலையின் அழகுக்குச் சிகரமானதோர் எல்லை இட்டது மாதிரி இருக்கும் அது.

அத்தகைய பகல் நேரம் ஒரு நாள் —

வழக்கம்போல் செண்பகம் — ஆம். அவளுடைய பெயரும் ஒரு மலரினுடையதுதான். ரதிச் சிற்பத்துக்கு ஒரு மாலையை அணிவித்துக்கொண்டிருந்தாள்.

அப்போது அவள் பின்னால் ஒரு குரல்—

''கொஞ்சம் அப்படியே நில்!''

திடுக்கிட்டுத் திரும்பிப் பார்த்தாள் செண்பகம். ஆனால் அதற்குள் முந்திக் கொண்டு விட்டது காமிராவின் சத்தம்.

'கிளிக்'—

ஒரு ரதிக்கு இன்னொரு ரதி மாலை அணிவித்த அந்தக் காட்சியைத் தத்ரூபமாகக் காமிரா தனக்குள் அடைக்கலப்படுத்திக் கொண்டு விட்டது.

இதென்ன!

செண்பகம் சீற்றத்தின் வடிவமாகி விட்டாளே! இளமை கொழித்த அவள் மார்பகம் ஆத்திர மூச்சில் வேகமாக விம்மித் தணிந்தது.

''யார் நீங்கள்?'' உறுமினாள் செண்பகம் அந்த இளைஞனை நோக்கி.

காமிராவைத் தோல் பெட்டியில் அடைக்கலப்படுத்தியவாறு புன்னகை செய்து கொண்டே செண்பகத்தைப் பார்த்துச் சொன்னான் அவன் :

''அழகு எத்தனை ரசிக்கத் தக்கது!''

இரத்தினச் சுருக்கமாக இவ்வார்த்தைகளைச் சொல்லிவிட்டுத் திரும்பினான் அவன், தன் வழி செல்ல.

செண்பகம் கோபமுற்ற வீராங்கனையாக மாறி, அவன் எதிரே வந்து, வழியை மறித்துக்கொண்டாள்.

''கொடுங்கள் அதை இப்படி!''

காமிராவைக் காட்டினாள்.

''அது எதற்கு உனக்கு?''

''உடைக்கப் போகிறேன் அதை!''—என்று சீறினாள் செண்பகம்.

அவன் துணுக்குற்றுப் பின்வாங்கினான்.

''இந்தக் காமிராவின் விலை என்ன தெரியுமா உனக்கு? ஆயிரம் ரூபாய்!''

''தெரியும். ஆனால் அதில் உள்ள படம் விலை மதிப்பைக் கடந்த ஒன்று. தெரியுமா உங்களுக்கு?''

அவன் பின்னுக்கு நகர்ந்து கொண்டிருந்தான்; அவனை எதிர்த்து அவள் முன்னுக்கு நகர்ந்து வந்து கொண்டிருந்தாள்.

''தரமாட்டீர்கள் அதை?'' என்று கத்தினாள் செண்பகம்.

அவன் குரலில் பரிதாப உணர்வு இழைந்தது: ''ஏன் இப்படிக் கூச்சல் போடுகிறாய்? இப்போது என்ன நடந்து விட்டது? நான் ஒரு நாடோடி. இப்படி உலகை வலைய வருபவன். அங்கங்கே என் மனம் ரசிக்கும் காட்சிகளைப் படமாகப் பிடித்துக் கொள்வேன்.... இது வெறும் பொழுது போக்குத்



தான்.... இதோ நான் அடுத்த பஸ்ஸிலேயே இந்த ஊரைவிட்டுப் போய் விடுபவன்...''

செண்பகத்தின் சீற்றம் குறையவில்லை:

''உங்களுடைய பேச்சு எதையும் நான் இனி ஒரு விநாடி நேரம் கூடக் கேட்கத் தயாராக இல்லை. அதை இப்படிக் கொடுப்பீர்களா மாட்டீர்களா?''



சிஷ்யர்: கச்சேரியிலே நீங்க பாடுனதைக் கேட்டுத்தான் அவரும் ஆனந்தமா பாடிண்டே காரை ஓட்டறார்.

---

"என்ன அர்த்தமில்லாமல் உளறுகிறாய்?"

செண்பகம் மேலும் தாமதிக்கவில்லை. அவன் கையிலிருந்து காமிராவைப் பற்றினாள் அவள்; தோல் பையிலிருந்து அதை உதறி எடுத்தாள். அடுத்த விநாடி, வெடி தீர்ப்பதற்காக வைக்கப் பெற்றிருந்த பாறைக் கற்களின் மேல் வீசிச் சாடினாள் அவள்.

அடுத்த கணம் பூக்கூடைகளைத் தூக்கிக் கொண்டு 'விர்'ரென்று கோயிலுக்கு வெளியே போய்விட்டாள்.

ஊரில் உள்ளோருக்குத் தெரிந்து விட்டால், தன் மானமும் உயிரும் என்னாவது? அதற்காகத்தான் ஆத்திர வெறியில் செண்பகம் அப்படிச் செய்து விட்டுப் போனாள்.

மனத்தில் சுத்தமான தன்மையுடன் பழகும் கலைத் தன்மையைப் பற்றிப் பிறருக்குத் தெரியப்படுத்திச் சொலிக்கும் ஊரார், அதைக் கலை உணர்வுடன்தான் படம் பிடிக்கப் பட்டதைப் பற்றி அறிந்தால் எப்படிப் பேசுவார்களோ என்னவோ.... ஊருக்கு இரு நாவுகளும் ஆயிரம் சிந்தனைகளும் உண்டு...

ஆயிரம் ரூபாய்க் காமிரா உடைந்தது பற்றி அவனுக்குப் பெரிதாகத் தோன்றவில்லை; அழகையும் இளமையையும் புகைப் படத்தில் சிறைப்படுத்தி வைத்திருந்தது வீணாகப் போயிற்றே என்று வருந்தினான்.

அன்று அந்த ஊரைவிட்டு அவன் சென்ற போது, 'அழகு எங்கே இருந்தாலும் அது வாழத்தான் செய்யும்' என்று எண்ணிக் கொண்டே சென்றான்....

**வெ**கு நாட்களுக்குப் பிறகு — ஏன், வருடங்களுக்குப் பிறகு — இப்போது மறுபடியும் அந்த ஊருக்கு வந்திருக்கிறான்.

இப்போது இந்த ஆளுயரத் தென்னை மரத்தடியில் உட்கார்ந்தபடி அண்ணாந்து பார்த்துக் கொண்டிருந்தவனுக்கு —

அந்தப் பழைய சம்பவத்தின் நினைவு மன அரங்கில் மீண்டும் ஒரு முறை நிழலாடியது. நண்பகலில் கோயிலுக்குப் போய் அந்த ரதிச் சிலைக்கு எதிரில் ஒரு மணி நேரம் உட்கார்ந்து விட்டுத்தான் இங்கு வந்திருக்கிறான் அவன்.

அவளைக் காணவில்லையே? பூத்தொடுக்கும் தொழிலையே விட்டு விட்டாளா அவள்?

வருடங்கள் ஒன்றன்பின் ஒன்றாக ஓடித்தான் விட்டன. அவளுக்குத் திருமணம் ஆகியிருக்கலாம்; அவள் அழகு, சம்சார பந்தத்தில் சிறைப்பட்டு மறைந்தும் போயிருக்கலாம்.

இந்த ஆளுயரத் தென்னை மரத்துக்குள்ள இளமை, மனிதத்துவத்துக்கு இல்லையா?

மண்ணில் படுத்திருந்த அளவில், கை அளாவிய இடத்தில் அவனுக்குக் கிடைத்தது. காம்பு அறுந்த ஒரு வாடா மல்லிகை —

அதைப் பார்த்துக் கொண்டே இருந்தவன் திடுக்கிட்டு, குரல் கேட்டு எழுந்து உட்கார்ந்தான்:

"யாரது. இங்கே படுத்திருக்கிறது?"

பெண் குரல்தான்; அதுவும்....

அவள்தான்; செண்பகம்!

அழகின் பிரதிமையாகவே — முன்னைவிட அதிக அழகு வாய்ந்தேதான் — தெரிந்தாள் செண்பகம். அவளது வலது கரத்தின் சுண்டு விரலைப் பத்து வயதுப் பாலகன் ஒருவன் பற்றியிருந்தான்; இடது கரத்தால் இடுப்பில் ஒரு வயதுப் பெண் குழந்தையை ஏந்தியிருந்தாள்.

முன்னிலும் அதிக — மெருகிட்ட — அழகு. அந்த ஆளுயரத் தென்னைகளை, அவர்களுக்குச் சொந்தமான அந்தச் சிறிய பூமிப் பகுதியில் பயிர் செய்தவன் அவன். அவற்றின் வளர்ச்சியின் குன்றாத அழகு — பேரழகு — அவளிடமும் குடிகொண்டிருந்தது.

"தம்பிப் பையா, ஐயாவுக்குக் கும்பிடு சொல்லு" என்று பாலகனிடம் சொன்னாள் அவள்.

சிறு பையன் கைகூப்பினான்.

"பெட்டி இருந்தால் பையனைப் படம் பிடியுங்களேன், ஐயா!" என்றாள் அவள்.

அவனுக்குச் சிலிர்த்தது.

சிறிது நேரத்தில் அவன் புறப்பட்டு விட்டான்.

"இது எங்க காணியுங்க. இன்னும் கொஞ்ச நேரத்திலே 'அவரு' வந்துவிடுவாருங்க. இரண்டு இளநீர் சாப்பிட்டு விட்டுப் போகலாம்" என்றாள் பரிவுடன்.

ஆனால் அவன் 'வேண்டாம்' என்று அசட்டுச் சிரிப்புடன் தலையாட்டிவிட்டு, குழந்தைகளின் அழகுக் கன்னங்களை நிமிண்டி விட்டு அங்கிருந்து நடந்து விட்டான்.

நடந்து கொண்டே வந்தவன், தன் கையில்தான் இன்னமும் ஏதோ ஒன்றை எடுத்துக் கொண்டு வந்திருப்பதை உணர்ந்து, கையைத் திறந்து பார்த்தான்.

அது அந்த வாடாமல்லிகை —

அதன் அழகு என்றும் வாடாது; தேங்காய்களை அமோகமாய்ச் சிருஷ்டித்திருக்கும் ஆளுயரத் தென்னை மரங்களின் அழகு என்றும் வாடாது —

தாய்மை என்ற சத்தியம் உள்ளுறையாக அமைய, அந்தக் கிராமத்துப் பெண்ணின்-செண்பகத்தின் — அழகும் என்றும் வாடாதது தான்.

# உதிரும் கூந்தலினால்

## கவலையடைகிறீர்களா?

## இந்த அரிய வாய்ப்பைப் பயன்படுத்திக் கொள்ளுங்கள்

தலை நிறைய ஆரோக்கியமான, செழிப்பான கூந்தல் இல்லையே என ஏங்கும் பல நபர்களில் நீங்களும் ஒருவராக இருக்கலாம். அதை எப்படி அடைவது என்பதை அறிந்தால் கஷ்டமே இல்லை. சரியான சாதனையினால் கூந்தல் பராமரிப்பில் தினசரி சிறிது கவனம் செலுத்தினால் மிக உபயோகமாக இருக்கும். மனத்தினால் நினைத்த மாத்திரம் நல்ல செழிப்பான, பளபளப்பான கூந்தல் வளராது. **எப்டோ (EPDO) உடனே உபயோகியுங்கள்.**

பம்பாயில் வியாபாரத் துறையில் பிரபலமானதும், உயர் ரக பண்டங்களைத் தயாரிப்பதில் விசேஷத் திறமையுள்ளவர்களான பாபுலர் டிரக்ஸ் கம்பெனியார் ஆயுர்வேத முறையில் எப்டோ (EPDO) தயாரித்துள்ளார்கள். இதை உபயோகித்து திருப்தி அடைந்தவர்களிடமிருந்து தினசரி பலப்பல கடிதங்கள் இதை வெகுவாகப் பாராட்டி வருகின்றன.

**எப்டோ (EPDO)** நிகரற்றது. கூந்தல் வளர்ச்சிக்கு அவசியமான இயற்கையான மூலிகைகள், எண்ணெய்களால் தயாரிக்கப்பட்டது. கூந்தலின் வேர்களுக்கு அத்தியாவசியமான போஷாக்குகளை அளிக்கிறது. கூந்தல் உதிருதல், இளம் வயதில் ஏற்படும் நரை, கூந்தல் வாளிப்பாக வளராது இருத்தல் போன்ற குறைகளைப் போக்கச் சிறந்தது எப்டோ.

நறுமணம் கமழும் எப்டோவை இன்றே **உபயோகிக்கத் தொடங்கி, ஒரு சில நாட்களிலேயே அதன் பலனை உணருங்கள்.** உங்கள் கூந்தலைப் பற்றிப் பெருமைப்படுவீர்கள். உங்களுக்கு நம்பிக்கை ஏற்பட கிழ்க்கண்டுள்ள **"திருப்தி ஏற்பட்டால் மட்டுமே பணம் செலுத்துங்கள்"** என்ற திட்டத்தினால் பயனடையுங்கள்.

ஒரு முழு சைஸ் எப்டோ ஹேர் ஆயில் பாட்டிலையும், அத்துடன் இலவச சாம்பிள் பாட்டிலையும் வி. பி. பி. மூலம் அனுப்பும்படி பெலிராம் மென்லால் & கம்பெனி, 308, பிரின்ஸஸ் தெரு, பம்பாய்-2 என்ற விலாசத்துக்கு எழுதவும். **இலவச சாம்பிள் பாட்டில்** சுமாராக 8 நாட்கள் உபயோகத்துக்கு வரும். முதலில் இலவச சாம்பிள் பாட்டிலை உபயோகித்து பூரண திருப்திஅடைந்தால், முழு சைஸ் பாட்டிலைத் திறந்து உபயோகிக்கவும். அப்படித் திருப்தி ஏற்படாவிடில் முழு சைஸ் எப்டோ பாட்டிலைத் திறக்காமல் திருப்பி அனுப்பி ரூ. 12ஐத் திரும்பப் பெறலாம்.

பம்பாயில் பெலிராம் மென்லால் அண்டு கோ. ஸ்தாபனத்தாரிடமிருந்து நேரில் ரூ 12க்கு ஒரு முழு சைஸ் எப்டோ பாட்டிலை வாங்கலாம். இந்தியாவில் எந்தப் பகுதிக்கும் வி. பி. பி. மூலம் ஆர்டர்கள் ஏற்றுக் கொள்ளப்படும். விலை ரூ. 15. (எப்டோ விலை ரூ. 12: பாக்கிங் தபால் செலவு ரூ. 3.)

### ஸ்டாக்கிஸ்டுகள்

எப்டோவை உபயோகித்துப் பலன் கண்டவராயிருந்தால் நீங்கள் உள்ளூர் ஸ்டாக்கிஸ்டுகளிடமிருந்து வாங்கிக் கொள்ளலாம். விலை: ரூ. 12. உள்நாட்டு வரி பிரத்தியேகம்.

**சென்னை :** தி ஸீமர்ஸ் கெமிகல் கார்ப்பொரேஷன் பிரைவேட் லிமிடெட், 2-81, லாயிட்ஸ் ரோடு.

**மதுரை :** ஆர். சி. ஸ்டோர்ஸ், 34, கீழச் சித்திரை வீதி

**பெங்களூர்:** தி பாபுலர் ஸ்டோர்ஸ், (Regd.) மல்லேஸ்வரம்.

**ஹைதராபாத் :** சத்தியவார் ஸ்டோர்ஸ், அபிட் ரோடு, ஹைதராபாத்.

**சிக்கந்திராபாத் :** சத்தியவார் ஸ்டோர்ஸ், எம். ஜி. ரோடு, சிக்கந்திராபாத்.

**கோயமுத்தூர் :** ஏ. நஞ்சப்பா அண் கோ., அவிநாசி ரோடு, கோயமுத்தூர்.

**ஆத்தூர் (சேலம் ஜில்லா):** சாமி மெடிகல் ஸ்டோர்ஸ், ஐ.ஆர்.பி. பில்டிங், ஆத்தூர்.

**மங்களூர் :** பேன்ஸி மார்ட், கனரா ஜுவெலர்ஸ் எதிரில், ஜி.எச்.எஸ்.ரோடு, மங்களூர்.

**மைசூர் :** ஸ்ரீநிவாசா ஸ்டோர்ஸ், மைசூர்.

**ஆலப்புழை (கேரளா):** எம். ஜே. டிரேடிங் கார்ப்பொரேஷன், ஆலப்புழை.

**எர்ணாகுளம்:** ஹஸானி ஸ்டோர்ஸ், Wine & G. மர்ச்சண்ட்ஸ், பிராட்வே.

தபால் ஆர்டர்களை பெலிராம் மென்லால் & கோ., (Dept. K.) 308, பிரின்ஸஸ் தெரு, த.பெ.தெ. 2190, பம்பாய்-2 அனுப்புவார்கள் பெலிராம் மென்லால் & கோ. மூலம் வாங்கப்படும் ஒரு முழு சைஸ் பாட்டிலுடன்தான் எப்டோ சாம்பிள் பாட்டில் அனுப்பப்படும்.

**கடிதம் ஆங்கிலத்திலேயே எழுதவும்**

# ஒரு முத்துப் பிறக்க..

அநுத்தமா

நான் செம்புதூர் கிராமத்துக்கு வந்து சேர்ந்ததே பெரிய காரியம். எத்தனை பேர் சிபாரிசு, எத்தனை கஷ்டங்கள்! சின்னக் கிராமமானாலும் செயலுள்ள மனிதர்கள் வாழும் இடம், செழிப்பான பூமி, ஒழுங்காக நடக்கும் பஞ்சாயத்து யூனியன் — எல்லாமுமாக என்னை அந்த ஊருக்கு ஈர்த்தன.

குருகுலத்தில் ஓர் உபாத்தியாயர் பதவி காலியாயிற்று என்று அறிந்ததும் நான் அங்கு விரைந்தேன். எனக்கு இருக்கும் செல்வாக்கில் கண்டிப்பாக அந்தப் பதவி எனக்குத்தான் என்பதில் சிறிதும் சந்தேகமில்லை.

இங்கு வந்து பார்த்த பிறகுதான் அந்த வேலைக்கு வேறு ஓர் ஆள் போட்டிருப்பதைக் கண்டேன். ஸ்ரீமதி சுசீலாவுக்கா, எனக்கா என்ற பிரச்னை குருகுல நிர்வாகத்ினரை வாட்டிக் கொண்டிருந்தது.

மூன்று மாத காலமாக அந்த இடத்துக்குத் தகுதியான மனிதர்களைத் தேடிக் கொண்டிருந்தார்களாம். நெருக்கடி வந்ததும் ஸ்ரீமதி சுசீலாவைத் தாற்காலிகமாக அந்த வேலைக்குப் போட்டு விட்டார்கள். ருசி கண்டவள் இப்போது விலகுவாளா? நிரந்தரமாக நின்று விட முயலாமல் இருப்பாளா?

ஆயினும், உண்மையில் எனக்குத்தானே தகுதி? பெரிய இடத்துச் சம்பந்தங்கள் எல்லாம் எனக்கு இருந்தன. நானே குருகுலத்துக்கு ஏதாவது ஓர் உதவி வேண்டுமானால் நான் செய்து தருவேன். அவளால் என்ன முடியும்?



தபாலாபீசைத் தாண்டும் போது யாரோ என்னைக் கைதட்டி அழைத்தார்கள். "உங்களுக்கு ஒரு புத்தகம் வந்திருக்கிறது" என்று என்னைக் கூவி அழைத்தார்கள்.

நான் சென்று கையெழுத்திட்டு அந்த நூல் அஞ்சலைப் பெற்றுக்கொண்டு கிளம்பினேன்.

நான் திரும்பும்போது தபாலாபீசை அடுத்த வீட்டு வாசலில் கோலம் போட்டுக் கொண்டிருந்தாள் ஸ்ரீமதி சுசீலா. நான் பார்க்காதது போல் முகத்தை வேறு பக்கம் திருப்பிக் கொள்வதற்குள் அந்த அம்மாள் நிமிர்ந்தாள். நேருக்கு நேர் பார்க்கும்படி நேர்ந்தது.

சங்கோசத்துடன் மெதுவாகப் புன்னகை பூத்தவாறே மாவுக் கையுடன் அந்த அம்மாள் என்னை வணங்கினாள். நானும் பதிலுக்குக் கைகூப்பினேன். "எங்கள் வீட்டுக்குள் வாருங்களேன். 'இவ'ரும் இருக்கிறார்" என்று அழைத்தாள்.

தர்ம சங்கடமாக இருந்தது எனக்கு. இருவரும் ஒரே வேலைக்குப் போட்டி போடுகிறோம். மற்றவருக்குக் கிடைக்கக் கூடாது என்று மறைமுகமாகப் பாடுபடுகிறோம். நேருக்கு நேர் பார்க்கும்போது அந்த அம்மாளைப் போல் என்னால் சிரிக்க முடியவில்லை.



நான் அசட்டுச் சிரிப்பு ஒன்றை அப்பிக் கொண்டு அவர்கள் வீட்டு வாசலை மிதித்தேன்.

ஸ்ரீமதி சுசீலா எனக்கு முன்னால் போனாள். நிறைமாத சூலி அவள். கோலம் போட்டதனாலோ என்னவோ மூச்சு வாங்கியது அவளுக்கு.

ரேழியைத் தாண்டிக் கூடத்துக்குச் சென்றோம். அங்கு கயிற்றுக் கட்டிலில் அவள் கணவர் படுத்திருந்தார். என்னைக் கண்டதும் முகத்தில் கேள்விக் குறியுடன் மெதுவாக முழங்கைகளை ஊன்றிக் கொண்டு எழுந்து அமரப் பார்த்தார்.

''நீங்கள் எழுந்திருப்பானேன்? அவரும் உங்களைப்போல் ஆண்பிள்ளை தானே?'' என்று கேட்டாள் மனைவி.

அவள் உள்ளே சென்றதும் கணவர் என்னை வரவேற்று உபசரித்தார். எடுத்த எடுப்பிலேயே அவர் விஷயத்துக்கு வந்தார். ''நீங்களும் சுசீலாவும் தான் போட்டி யிடுகிறாற்போலத் தெரிகிறது?'' என்று அவர் சிரித்துக் கொண்டே கேட்டதும், என் மனசுக்குள் இருந்த அச்சம் மறைந்து விட்டது.

''ஆமாம். இங்கு வரும்வரையில் எனக்கு இந்த விஷயம் தெரியாது. ஊரார் உங்கள் பக்கம்தான் இருப்பார்கள் போல் தெரிகிறது. சின்னக் கிராமத்தில் ஊராரின் ஒத்துழைப்பின்றி என்ன காரியம் நடக்கும்?'' என்று நான் என் ஏமாற்றத்தை அடக்க மாட்டாமல் குரலில் காட்டி விட்டேன்.

''ஊரார் என்ன சார், பெரிய மலையா? மனிதனுடைய சுபாவம் புதுமையை விரும்பினாலும், அதை ஏற்கச் சற்று தயங்கத்தான் செய்யும். பழகிய சாமான்களை விட்டுவிட ஒப்பாமல் தவிப்பது அதன் இயல்பு. என் மனைவியை அவர்களுக்கு மிகப் பழக்கம். கிராம சேவிகையாக வந்தாள். நானும் அடுத்த ஊர் பெரிய பள்ளியில் உபாத்தியாயன். பழகினதால் ஏற்பட்ட பிடிப்பு. கலைப்பது சிரமம் போலத் தோன்றும். உங்களிடம் ஒரு மாதம் பழகினால் ஒன்றி விடுவார்கள்.''

இதைக்கேட்ட எனக்கு மேலும் தைரியம் வந்து விட்டது. ''என் மனைவிக்கு க்ஷயம். இங்கிருந்து ஐந்து மைலில் இருக்கிற

சிகிச்சைச்சாலையில் இருக்கிறாள். நான் தினமும் மாலையில் போய்ப் பார்த்து விட்டு வரலாம். குழந்தை இருக்கிறான். எங்கள் ஊர் அருகே தஞ்சாவூரில்தான். என் தம்பி காரில் குழந்தையைக் கொண்டு வருவான்.''

''த்லொ, த்லொ!''

''என்ன வாழ்க்கை போங்கள்! எனக்கோ என்ன என்னவோ ஆசைகள். கடவுள் எனக்குப் பண வசதியைக் கொடுத்திருக்கிறார். கூடவே மனக் கஷ்டத்தையும் கொடுத்து விட்டார். கல்யாணமாகி ஒரு வருடம் நன்ருக இருந்தாள் என் மனைவி. பிரசவத்துக்குப் பிறகு நோய் வந்து விட்டது. ஏற்கனவே உடலில் இருந்திருக்க வேண்டும் என்கிருர்கள் வைத்தியர்கள். அவள் தாயும் இதே நோயில் இறந்தாளாம். விவாகத்துக்கு முன் தெரியவில்லை. இப்பொழுது வாழ வேண்டிய வயதில் வாழ்க்கை இழந்து, இன்பம் துளும்ப வேண்டிய இடத்தில் வேதனையைத் தேங்க விட்டுக் கொண்டு திரிகிறேன். நான் ஒரு கவி, சார். இதோ பாருங்கள் என் முதல் புத்தகம்'' என்று பேச்சு நடுவில் நான் அன்று வந்த புத்தகத்தைப் பிரித்து அவரிடம் கொடுத்தேன்.

ஆர்வத்தோடு வாங்கி அவர் படித்தார். புரட்டிக் கொண்டே என்னிடம் பேச்சுக் கொடுத்தார்.

''நீங்கள் ஏன் வேலை தேட வேண்டும்? கலைமகள் தொண்டிலேயே உங்கள் வாழ்வைச் செலவிடலாம் போலத் தெரிகிறதே?''

தன் மனைவியின் வேலைக்கு ஏன் நான் போட்டியிட வேண்டும் என்று கூறுகிருரோ என்று என் மனம் எச்சரிக்கையாக நின்றது.

''என் மனைவியின் உடல்நிலையை யோசித்துத்தான்....''

''அவசியம் கவனிக்க வேண்டிய விஷயம்.''

''நான் வருகிறேன்'' என்று கூறிக் கொண்டு எழுந்தேன் நான்.

''இருங்கள்'' என்று குரல் கொடுத்துக் கொண்டே கஸ்லா அங்கு வந்தாள்.

காப்பியும் பலகாரமும் சாப்பிடவே எனக்கு உறுத்தியது. ஆயினும் அவர்கள் உபசரிப்பதைத் தட்டவும் தெரியவில்லை.

''இதை உங்கள் வீடாக நினைத்துக் கொண்டு அடிக்கடி நீங்கள் வரவேண்டும்'' என்று தம்பதிகள் கூறினார்கள்.

நான் வீடு திரும்பி விட்டேன். அவரவர் வாழ்க்கை அவரவர்களுக்கு. கஸ்லாவும் வாசுதேவனும் இன்று உறவு பூண்டு என் வாழ்வின் இலட்சியத்தையே தகர்த்து எறிந்துவிட முடியுமா? கிடைத்த வேலையை நான் விட்டு விடப் போவதில்லை.

மறு நாள் நான் குருகுலத்துக்குப் போனேன். எனக்கு முன்பே அங்கு கஸ்லா வந்து அமர்ந்திருந்தாள். என்னைக் கண்டதும் கைகூப்பினாள். நானும் மனம் ஒன்ருமல் கையைக் கூப்பி வைத்தேன்.

''நான் ராஜிநாமாக் கடிதம் தருவதற்கு வந்தேன்'' என்று தானாகவே சொன்னாள் கஸ்லா. என்ன உட்கருத்து வைத்துப் பேசினாளோ, தெரியாது.

''அப்படியா?'' என்றேன் நான் அர்த்தமில்லாமல்.

''என் தம்பி ஊரிலிருந்து வந்திருக்கிறான். என் பெண்ணை அவனுக்குத்தான் கல்யாணம் செய்து கொடுத்திருக்கிறேன்.''

''மாப்பிள்ளை என்று சொல்லுங்கள்'' என்றேன் நான்.

''ஆமாம்.''

இதற்குள் தலைமை உபாத்தியாயர் வந்து விடவும், முதலில் கஸ்லா உள்ளே போய்ப் பேசி விட்டு வந்தாள். சிரித்த முகத்துடன் வெளியே வந்து, பிறகு வகுப்புகள் பக்கமாக நடந்து சென்ருள்.

தலைமை ஆசிரியர் என்னை வரவேற்ற போது அவ்வளவாகத் திருப்தியுடன் இல்லை என்று எனக்குத் தோன்றியது. இருந்தாலும், நேரிடையாகப் பேச்சிலோ எழுத்திலோ எனக்கு மறுப்பு வந்தாலன்றி நான் விடுவதாக இல்லை. ஆகையால் அவர் சுட்டிக் காட்டிய இடத்தில் கையெழுத்திட்டு நான் குருகுலத்தின் புதிய ஆசிரியனுகச் சேர்ந்து விட்டேன்.

அன்று காலை நான் ஏரிக்கரைப் பக்கமாகப் போனேன். ஒரு சிறு கல்லை எடுத்து அதில் வீசப் போனவன் இருவர் பேச்சரவம் கேட்டு, ஓங்கிய கையைச் சட்டென்று அப்படியே நிறுத்திக் கொண்டேன். கணவனும் மனைவியும் சண்டையிடுகிருர்கள் போலும் என்று ஊகித்தவனாய் வேகமாக நகர ஆரம்பித்த நான், ஆலமரத்தின் ஒரு வேரில் காலை உதைத்து அடிபட்டு நின்றேன். நான் இருப்பதை அந்தத் தம்பதிகள் அறிந்துவிடக் கூடாது என்று, நாவைக் கடித்துக்கொண்டு, 'விண் விண்' என்று தெறிக்கும் காலைப் பிடித்துக் கொண்டேன்.

''நீ உன் அம்மாவைப் பற்றிப் பேசுவதாக எண்ணிக் கண்டபடி உளறுகிருய். என் அக்கா அவள் என்பதையும் நினைவில் வைத்துக் கொள்!'' என்று கணவன் அதட்டினான்.

''ஆமாம்! பெரிய இது! அம்மாவானால் என்ன, ஆட்டுக்குட்டியானால் என்ன? அவளுக்கு வயது நாற்பது, அப்பாவுக்கு ஐம்பது. 'வியவஸ்தை இல்லை' என்று உரக்கக் கூவுவேன் நான். தீபாவளிக்கு அழைப்பது போலக் கடைசியில் மருத்துவம் நடத்தத் தானே அழைத்திருக்கிருர்கள்!''

''பெரிய மருத்துவச்சி நீ! சீ, வாயை மூடு!''

நான் அதற்குமேல் அங்கு நிற்க விருப்பப்படாமல், கூடுமானவரை ஓசைப்படாமல் அங்கிருந்து அப்பால் அகன்று சென்றேன்.

கணவனின் குரல் மட்டும் எனக்கு எங்கோ கேட்டமாதிரி இருந்தது. மீண்டும் சென்று அவர்கள் யார் என்று பார்ப்பது இங்கிதமல்ல என்பதனால் பேசாமல் வந்தேன்.

மறுநாள் காலை நான் குருகுலத்தில் தீபாவளிக்கு அலங்காரங்கள் செய்ய உதவி செய்து கொண்டிருந்தேன். மாவிலைக் கொத்துக்களைக் குழந்தைகள் எடுத்துத் தரவும், நான் கயிற்றுக்குள் நுழைத்து முறுக்கி விட்டுக் கொண்டிருந்தேன். பிறகு பனங் குருத்துக்களைக் கொண்டு தோரணம் கட்டும் இடத்தில் போய் அமர்ந்தேன்,

எனக்கு அன்றே குருகுல வாசம் மிகவும் பிடித்து விட்டது.

"அடடா, குமாரா ?" என்று குரல் கேட்டு நான் தோரணத்திலிருந்து தலை நிமிர்ந்தேன். என் கல்லூரித் தோழன் மாது என் எதிரே நிற்பதைக் கண்டேன்.

"மாது! நீ எப்பொழுது, எப்படி இங்கே வந்தாய்?" என்று நான் ஆச்சரியத்தோடு கேட்டேன்.

"இனி ஒன்று விட்டு விட்டாயே ?"

"என்ன ?"

"'ஏன்?' என்றும் கேட்டால் தோரணம் பூர்த்தியாகி விடுமே ?"

"சரி, நீயேதான் சொல்."

"என் அக்கா வீட்டுக்கு வந்திருக்கிறேன். எப்பொழுதும் இந்தச் சமயத்தில் இங்கு வந்து ஒத்தாசை செய்வது வழக்கம். வந்தேன். நீதான் புதிய ஆசிரியர் என்று எனக்கு எப்படித் தெரியும் ? இப்பொழுதே என் அக்காவும் அத்திம்பேரும் உன்னைப்பற்றியே பேசுகிறார்கள். அவ்வளவு கவர்ந்துவிட்டாய் நீ !"

"சுசீலாம்மாவின் தம்பி நீதானா? நேற்று காலை அந்த அம்மாள் சொன்னார்கள். மாப்பிள்ளையும்கூடப் போலத் தெரிகிறதே ?"

"ஆமாம்."

எனக்கு உடனே ஆலமரத்தடியில் முன்னாள் மாலை நடந்த தாம்பத்தியச் சண்டை நினைவுக்கு வந்தது. மாதுதான் மனைவியுடன் சண்டை போட்டிருக்கிறான்.

"உன் மனைவி எங்கே? ஸ்ரீமதி மாதுவை நான் பார்க்க வேண்டாமா ?"

"அவளா? அவள் வீட்டில் தீபாவளிப் பட்சணங்கள் செய்து கொண்டிருப்பாள்."

"உன் அக்காவுக்கு இதுதான் பேறு காலமோ ? உன் அத்திம்பேருக்கு என்ன உடம்பு ?"

"அக்காவின் கடைசிப் பையனுக்குப் பன்னிரண்டு வயதாகிறது. இப்பொழுது மீண்டும் கர்ப்பமாக இருக்கிறாள். அதனால் மிகவும் சங்கோசப்படுகிறாள். அவள் கணவருக்கு நாலு மாதங்களுக்குமுன் காய்ச்சல் வந்தது. அதன் பிறகு நடக்க வரவில்லை."

"எப்படிக் குடும்பம் நடக்கும் ?"

"அக்கா சம்பாத்தியம், சிக்கனம், தியாகம் எல்லாமும்தான்."

"அவர் எப்படிப்பட்டவர் ?"

"மெத்தப் படித்தவர். இலக்கியத்தில் நல்ல பற்று. இருவரும் வயிறு காய இலக்கியத்தைச் சுவைத்துக் கொண்டு காலம் தள்ளி விடுவார்கள். குழந்தைகளும் நல்ல புத்திசாலிகள். பெரியவர்கள் இருவரும் வேலை பார்த்துக் கொண்டே இரவுக் கல்லூரிகளில் படிக்கிறார்கள். மற்ற இருவர் படிப்பின் மதிப்பினால் உபகாரச் சம்பளம் பெற்றுப் படிக்கிறார்கள். என் அத்திம்பேரும் கிராமத்துப் பள்ளிக்கூட ஆசிரியராக இருந்து




"பக்கத்து வீட்டுக்கும் புதுசாக் குடி வந்திருக்கிறவன் நான்தான். வேட்டையாடுவதிலும், துப்பாக்கியால் குறி பார்த்துச் சுடுவதிலும் நான் ரொம்பக் கெட்டிக்காரன். ரெண்டு நாளா நீங்க பாடறதைக் கேட்டுண்டுதான் இருக்கேன்."

கொண்டே எம். ஏ. பட்டம் வரை படித்து விட்டார். சென்னைக் கல்லூரி ஒன்றில் போதகர் வேலை கிடைக்க விருந்தது. அதற்குள் காய்ச்சல் வந்துவிட்டது. அவர்களுக்கு எல்லாமும் உண்டு. அதிர்ஷ்டம் மட்டும் கிடையாது" என்றான் மாது.

தன், தமக்கையின் வேலையைப் பிடுங்கிக்கொண்டாள் என்று என்னைச் சுட்டிக் காட்டுகிறானோ ?

"நீ எல்லோரைப் பற்றியும் பேசினாய். முக்கியமான வளைப் பற்றிப் பேசவே இல்லையே ? உன் அக்காவின் பெண் எப்படி ?" என்று கேட்டேன் நான்.

"அவள் ஒரு முட்டாள்!" என்று பளிச்சென்று பதில் சொன்னான் என் நண்பன்.

எனக்குத் தூக்கி வாரிப் போட்டது. சங்கடமாகவும் இருந்தது. அதனால் தொடர்ந்து பேசாமல் இருந்து விட்டேன். "உனக்குப் பட்சணம் கிடைக்கவில்லை போலும்" என்று கேலி செய்து விட்டுச் சிரித்து, பேச்சுக்கு முற்றுப் புள்ளி வைத்தேன்.

"இன்று நீ எங்களுடன் சாப்பிட வாயேன்" என்று மாது அழைத்தான்.

நான் தயங்கினேன்.

"வா, குமார்! நாமும் சிறிது நேரம் பேசிக் கொண்டிருக்கலாம். எத்தனை நாட்களாகி விட்டது ஒருவரை ஒருவர் பார்த்து !"

நான் ஒப்புக் கொண்டேன்.

அன்றிரவு நான் அவர்கள் வீட்டுக்குப் போனபோது மாக்கோலமும், செம்மண்ணும், மாவிலைத் தோரணமுமாக அழகாக இருந்தது. கூடத்தில் கட்டிலைச் சுற்றி எல்லோரும் அமர்ந்திருந்தனர். ஊரிலிருந்து பையன்களும் வந்திருந்தனர். எதைப் பற்றியோ பேசிவிட்டு எல்லோரும் 'கொல்' லென்று சிரித்துக் கொண்டிருந்தசமயம் நான் அங்கு சென்றேன்.

சிரிப்பை அடக்கிக் கொண்டு அனைவரும் தெருவைப் பார்த்தனர். சுசீலா மெதுவாகக் கைகளைத் தரையில் ஊன்றிக் கொண்டு எழுந்து என்னை வரவேற்றாள். மாது தன் அத்திம்பேரின் கட்டில்மீது அமர்ந்தபடியே, "வாடா, வாடா" என்று அழைத்தான்.

என் கண்கள் ஸ்ரீமதி மாதுவைத் தேடின.

"இலை போடலாமா ?" என்று சுசீலாவின் மூத்த மகன் சிவா கேட்டான்.

"இருடா, நான் வருகிறேன்" என்றாள் தாயார்.

நான் பார்த்துக் கொண்டே இருக்கையில் பிள்ளைகள் நால்வரும் எழுந்து இலையைப் போட்டார்கள். குடிக்கத் தண்ணீர் வைத்தார்கள். பழங்களைப் பரிமாறிவிட்டார்கள். ஊறுகாய்களை எதிரே கொண்டு வைத்தனர்.

"எழுந்திருங்கள். இன்னும் கொஞ்சம் போனால் அவர்கள் எல்லாவற்றையும் சாப்

# உங்கள் நீர்ப்பாசன தேவைக்கேற்ப

ஒவ்வொரு மேனன் மசல் இன்ஜினும் சிறந்த முறையில் தயாரிக்கப்படுகின்றது. நீண்டகாலம் உழைப்பதற்காக உறுதியாக செய்யப்படுகின்றது. மேலும் குறைந்த விலையில் ஸ்பேர் சாமான்கள் கிடைப்பதால் மேனன் இன்ஜின்கள் எப்போதும் இயங்குகின்றன.

சுமார் ரூ. 3 விலையுள்ள ஒரு காலன் க்ருட் ஆயில் கொண்டு 60,000 காலன் தண்ணீரைப் பாய்ச்சலாம்.

ஒரு 5 h.p. மேனன் இன்ஜினை சென்ட்ரிப்யூகல் பம்ப்புகளுடன் நேரிடையாக இணைக்க முடியும். 6 h.p. மேனன் இன்ஜினைக் கொண்டு கரும்பு பிழியும் எந்திரத்தை இயக்க முடியும். ஆகவே மேனன் டீசல் இன்ஜின்கள் உங்களுடைய விவசாயத்தில் பலவிதங்களில் வெற்றி கொடுக்க வல்லவை.

# மேனன் இன்ஜின்கள்

*தமிழக அரசாங்கத்தின் அங்கீகாரம் பெற்றவை*

**மேனன் & மேனன்**

விக்ரம் நகர் — கோலாப்பூர்

*தமிழகம், கேரளாவுக்கு ஏகபோக விநியோகஸ்தர்கள் :*

**ஆர்வீ & கம்பெனி**

3, ஸலிவன் கார்டன் ரோடு, சென்னை-4

போன் : 74150 தந்தி : "ARVEECO"



[illegible] H.P. 1500 RPM Diesel engine



6 H.P. 650 RPM Crude Oil engine

MM-105A-TL

பிட்டும் முடித்து விடுவார்கள்'' என்று கூறி எங்களைச் சாப்பிட அழைத்தாள் சுசீலா.

என் கண்கள் தேடின நபர் அப்பொழுதும் காணவில்லை.

சுசீலாவின் கணவர் படுத்துக் கொண்டே எங்களுடன் பேச்சுக் கொடுத்தார்.

நிறை மாதக்காரியான சுசீலா தான் குனிந்து நிமிர்ந்து எங்களுக்குப் பரிமாறினாள். பார்க்கவே கஷ்டமாக இருந்தது.

''நீங்கள் எதிரே வைத்து விடலாமே? நாங்களே போட்டுக் கொண்டு சாப்பிடுவோமே?'' என்றேன் நான்.

கலகலவென்று சிறு பெண் போலச் சிரித்தாள் சுசீலா. ''பொம்மனாட்டிக்கு இது ஒரு சிரமமா?'' என்று கேட்டு விட்டு, கூட ஒரு கரண்டி பாயசம் ஊற்றினாள்.

அப்பொழுதுதான் உள் பக்கத்திலிருந்து எழுந்து வந்தாள் மாதுவின் மனைவி. அவன் ஒரு முறை அவளை நிமிர்ந்து பார்த்தான். பிறகு குனிந்து இலையையே பார்த்துக் கொண்டிருந்தான்.

பையன்கள் நால்வரும் கண்களால் தந்தி அடித்துப் பேசிக் கொண்டனர். தாம்பத்தியச் சண்டையை நன்கு ரசித்தனர் போலும்.

''நீயும் உட்காரேன், அம்மா! ஒரு குரல் கூப்பிடுவதற்கு என்ன?''

மகனின் குரலின் சிடுசிடுப்பைக் கவனியாது போல் சுசீலா சிரித்தாள். ''நீ இவ்வளவு நேரம் வேலை செய்தாயே, கொஞ்சம் உனக்கும்தான் ஓய்வு வேண்டாமா?''

''ஓய்வு எடுக்கத்தானே இங்கு வந்திருக்கிறேன்!'' என்று மகள் முணுமுணுத்தது என் செவியில் நன்றாக விழுந்தது. நான் ஓரக்கண்ணால் பார்த்தபோது அவள் உதட்டைப் பிதுக்கிக் கொண்டே சமையலறையில் நுழைவது தெரிந்தது.

''ஒரே ஒரு மைசூர்ப்பாகு!'' என்று சுசீலா உபசரித்தாள்.

நான் கைகளால் இலையை மறைத்துக் கொண்டே நிமிர்ந்தேன். அவள் கண்களில் நீர் ததும்புவது தெரிந்தது. குரலில் ஒன்றும் பேதமில்லையே தவிர, முகம் கன்றியிருந்தது.

சுசீலாவின் கணவருடன் பேசுவதே ஒரு தனி அநுபவமாக இருந்தது. ஒரு முறைகூட அவர் தம் காலைப் பற்றிக் கூறவேயில்லை. கிரிக்கெட் பந்தயத்தைப் பற்றிப் பையன்களுக்கு மேலே சத்தம் போட்டுப் பேசினார்.

''மணி பத்து அடித்து விட்டது. குருகுலத்தில் அவர்கள்....'' என்று சுசீலா நினைவு மூட்டினாள்.

நான் விடைபெற்றுக் கொண்டு கிளம்பினேன்.

என் கூட மாதுவும் வந்தான். ''அக்கா! நானும் குமாருடன் குருகுலம் போகிறேன். விடியற்காலம் இருவரும் வருகிறோம்.''

''விடியும் வரையில் இருந்து விடாதே!'' என்றுரைத்து அக்கா விடை கொடுத்து அனுப்பினாள்.

''உன் அக்கா வீட்டாரைப் பார்த்தால் எனக்கு ஆச்சரியமாக இருக்கிறது, மாது!'' என்றேன் நான்.

''ஏன்? பையன்களைச் சொல்கிறாயா? அக்காவா, அத்திம்பேரா, அல்லது என் அருமை மனைவியையா?''

## நீச்சல் அறுவடை!



ஏழடி உயரத்துக்குப் பயிர் செழித்து வளர்ந்திருந்தது. அறுவடை சமயம். மகாராஷ்டிரத்தில் ஜிட்டூர் கிராமவாசிகள் அதிகாலையில் எழுந்து அறுவடைக்கான ஆயுதங்களுடன் கிளம்பினார்கள்.

வயலை அடைந்தபோது .... என்ன பயங்கரம்! எங்கு பார்த்தாலும், வெள்ளக்காடு! எல்தாரி திட்டத்தின்படி அணை கட்டித் தேக்கப்பட்ட நீர் கிராமப்புறங்களிலெல்லாம் பரவி வயல் வரப்புகளை மூழ்கடித்திருந்தது.

கிராமவாசிகளின் திகைப்பு ஒரு சில விநாடிகளே நீடித்தது. நீர்மட்டம் படிப்படியாக மேலும் உயர்வதற்கு முன் அறுவடையை முடித்துக் கொள்ளக் கருதினார்கள். ஆளுக்கொரு சுரைக்காய்க் கூட்டை முதுகில் கட்டிக் கொண்டு நீரில் இறங்கி நீந்தினார்கள். ஆறு அடி ஆழமுள்ள நீரில் நீந்தியும் மிதந்தும் அறுவடை செய்தார்கள். பயிர் பிழைத்தது.

வி. எஸ். ஸ்ரீகடண்கர்

''பொதுப்படையாகச் சொன்னேன். வீட்டின் தலைவர் கால் ஒடிந்து, சம்பாத்தியமின்றிக் கிடக்கிறார்; தலைவி பேறுகாலத்தில் நிற்கிறாள்; ஊதியமும் நின்றுவிட்டது. குழந்தைகள் முன்னுக்கு வரவேண்டும். நீ உதவி செய்வாயோ?'' என்று நான் கேட்டேன்.

''அவர்கள் பெற்றுக் கொண்டால் தரலாம். ஆனால், அவர்கள் ஒரு செப்புக் காசு கூட வாங்க மாட்டார்கள். நாளைக் காலை தீபாவளிக்கென்று நான் அவர்கள் இருவருக்கும் புடவை வேஷ்டி வாங்கி வந்திருக்கிறேன். அதை அவர்களை வாங்க வைத்தால் நான் வெற்றி கண்ட மாதிரிதான்.''

''அதிசயம்தான். எப்பொழுதும் சிரித்தபடியே இருக்கிறார்களே?''

''பெண் ஒருத்தி இருக்கிறாளே, அழுவதற்கு?''

''நீ அநாவசியமாக உன் மனைவியிடம் சண்டை போடுகிறாய். அவள் சிறு பெண்தானே? அநுபவமின்மையினால் ஏதேனும் பேசினால்.......''

குருகுலத்தில் பட்டாசு வெடிகள் கேட்டு விழித்துக் கொண்டோம். குழந்தைகள் எல்லாம் மங்கள ஸ்நானம் செய்து விட்டுப் புத்தாடை உடுத்துக் கொண்டு, நெற்றியில் திருநீற்றுப் பொலிவுடன் நடமாடுவதைப் பார்க்கும்போது, முருகக் கடவுளே பல கோலங்களில் சுற்றி வருவதுபோல் இருந்தது.

நிறைந்த மனத்துடன் நான் மாதுவுடன் அவர்கள் அக்கா வீடு சென்றேன். அங்கேயும் பையன்கள் நால்வரும் குளித்தாகிவிட்டது; வாசுதேவனும் குளித்துவிட்டுச் சாய்வு

நாற்காலியில் அமர்ந்திருந்தார். இரு கால்களையும் எதிரே ஒரு பெட்டி மீது வைத்துக்கொண்டு வாசலைப் பார்த்து எங்களுக்காகக் காத்துக் கொண்டிருந்தார்.

''வாருங்கள், உங்கள் அக்கா காத்துக் கொண்டிருக்கிறாள்'' என்று எங்கள் இருவரையும் இணைத்து அணைத்துப் பேசினார் அவர்.

பெண்ணையும்தம்பியையும் கோலத்தின்மத்தியில்பலகையில் அமர்த்தி, எண்ணெய் தேய்த்து, ஆரத்தி எடுத்து எல்லாம் செய்தாள் சுசீலா.



"முன்னேயெல்லாம் என் பையன் சங்கீதம்னா 'படி'க்கு எவ்வளவுன்னு கேட்பான். இப்போ திருந்திட்டான்!"

"எப்படி ?"

"சங்கீதம்னா 'லிட்டர்'க்கு எவ்வளவுன்னு கேட்கிறான்...!"

நாங்கள் சாப்பிட்டபிறகு குருகுலத்துக்கே போய் விட்டோம்.

மாதுவும் நானும் மரத்தடியில் படுத்து நன்றாக உறங்கி விட்டோம். சுசீலாவின் மகனின் குரல்தான் எங்களை எழுப்பியது.

''மாமா! ஆண் குழந்தை பிறந்தது அம்மாவுக்கு....'' என்றான் அவன்.

பெற்ற பெண் ஏச, மனம் கூசி, கட்டினவர் நோய் வாய்ப்பட்டுக் கிடக்க.... சுசீலாவின் பொறுமை என்னை மிகவும் கவர்ந்தது.

நான் வாசுதேவன் அருகில் அமர்ந்திருந்தேன். ''உங்களிடம் ஒன்று கேட்க விரும்புகிறேன்'' என்று பீடிகை போட்டேன்.

''என்ன? தாராளமாகக் கேளுங்கள். எங்களிடம் உள்ளது உங்களுடையது'' என்றார் அவர்.

''குடும்பம் என்றால் எவ்வளவு வேதனை இருக்கும்? நீங்கள் எப்படிச் சிரிக்கிறீர்கள்?''

''வேதனைதான் உண்மைச் சிரிப்பை உண்டாக்கும், அல்லவா?'' என்று கூறிச் சிரித்தார் அவர்.

சுசீலா கூடத்தில் எதையோ ஒதுங்க வைப்பதை ஒரு விநாடி கண்ணோட்டம் விட்டேன்.

''அவளைப் பார். அவள் வேதனையிலிருந்துதான் நாளை ஒரு ஜீவன் பிறக்கப்போகிறது. அதன் விளைவு ஆனந்தம்தானே? வேதனையின் எல்லையில் ஆனந்தமும், ஆனந்தத்தின் எல்லையில் வேதனையும்தானே உலக நீதி?''

''எனக்குப்புரியவில்லை'' என்றேன் நான்.

''ஒரு முத்து பிறக்க எத்தனை வேதனை சிப்பிக்குள் அடங்குகிறது? அநுபவம் என்னும் மணல் அரிக்க அரிக்க, நிறைவு என்கிற முத்து பிறக்கும்.''

நான் வாயடைத்தேன்.

பட்சணங்களைச் சாப்பிட்டபிறகு ஆண் பிள்ளைகளாகிய நாங்கள் அனைவரும் ஏரிக் கரையோரமாக உலாவப் போய்விட்டோம்.

சுசீலாவும் பெண்ணும் குருகுலத்துக் குழந்தைகளுக்குப் பட்சணங்களை எடுத்துக் கொண்டு கிளம்பினார்கள்.

கிராமத்துச் சூழ்நிலை மிகவும் ரம்மியமாக இருந்தது. பகல் உணவுக்குச் சரியாகத்தான் நாங்கள் வீட்டுக்குத் திரும்பினோம். அதற்குள் அங்கு பல மாறுதல்கள்.

''சுசீலாவுக்குச் சமயம் வந்துவிட்டது. நீங்கள் எல்லோரும் குருகுலத்துக்குப் போய்ச் சாப்பிட வேண்டியதுதான்'' என்றார் வாசுதேவன்.

''வேண்டாம், அப்பா! நான் சமைத்து விட்டேன். இங்கேயே சாப்பிடலாம்'' என்றாள் ராதிகா - மாதுவின் மனைவி.

நான் மாதுவைப் பார்த்தேன். பெருமையுடன் மனைவியைப் பார்த்தான் அவன்.

வாசுதேவன் அருகில் நான் அமர்ந்திருந்தேன். பின்கட்டில் பெண்கள் போவதும் வருவதுமாக இருந்தனர்.

நான் உடனே எழுந்து சென்று தலைமை ஆசிரியரைக் கண்டு பேசிவிட்டு வந்தேன். பிறகு வாசுதேவனிடம் சென்றேன். ''உங்களிடம் ஒன்று சொல்ல வந்தேன். நான் நாளைக்கு ஊருக்குப் போகிறேன்'' என்றேன்.

''ஏன்? குழந்தையைப் பார்க்க வேண்டும் என்று தோன்றி விட்டதா?'' என்று கேட்டார் அவர்.

நான் பதில் சொல்வதற்குள் ராதிகா வந்து கற்கண்டுத் தட்டை நீட்டினாள். குற்றம் கூறிய அதே பெண் குதூகலத்துடன் கொண்டாடும் விந்தை என்னை வியக்கச் செய்தது.

''இல்லை. இந்த வேலைக்குச் சுசீலாம்மா தான் தகுதி. வளரும் குழந்தைகளுக்குத் தாயாரின் அரவணைப்புத் தேவை. அதை நான் கற்றுக் கொண்டேன். தாயாரின் உழைப்பும், கண்ணீருமே வளரும் உலகுக்கு உரமும், நீரும் என்று தோன்றி விட்டது எனக்கு.''

''நீங்கள் ஒரு கவியல்லவா, அதனால் இப்படிப் பேசுகிறீர்கள். உண்மைதான். ஒரு தாயின் உடலின் வேதனையிலிருந்து உலகம் உருவாகிறது. ஆயின் ஒரு கவியின் உள்ளத்தின் வேதனை அதே உலகுக்கு உய்யும் வழியைக் காட்டுகிறதல்லவா? எங்கள் குடும்பத்தின் பொருளாதார நிலையைக் குறித்து நீங்கள் உங்கள் லட்சியத்தைக் கைவிடக் கூடாது. பிள்ளைகள் இருவர் சம்பாதிக்கிறார்கள். போதாக்குறைக்கு மாது இருக்கிறான். இரண்டு மாதம் போனால் நான் நடப்பேன் என்று வைத்தியர்கள் சொல்கிறார்கள். சுசீலாவும்.....''

''சுசீலாம்மா வேலைக்கு வரும்வரை நான் செய்கிறேன். பிறகு நான் போகப் போகிறேன். கவி சூழலைத் தேடிக் கொண்டு போவது எவ்வளவு மதியீனம் என்று புரிந்துவிட்டது. சூழ்நிலை அல்லவா கவியை உருவாக்க வேண்டும்?''

உணர்ச்சி மிகப் பேசியது எனக்கே சங்கோசத்தைத் தந்தது. நான் எழுந்து விட்டேன்.

வாசுதேவன் என் கையைப் பற்றினார்.

பின்கட்டிலிருந்து குழந்தை, ''குவா, குவா'' என்று புதுக் குரல் கொடுத்து ஆமோதித்தது.

**Printed & published by R. Ananthanarayanan on behalf of Messrs. Bharathan Publications Private Limited at Kalki Press, Kilpauk, Madras-10**
**Managing Editor: T. Sadasivam**

REGISTERED No. M. 4392
Registered as a Newspaper in Ceylon